இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை." —41



இங்கே ஒரு சிக்கல் உள்ளது. அது 'மூவர்க்கும்' என்னும் சொல்லைப்பற்றியது. 'மூவர்க்கும்' என்பதுபற்றிப் பலவிதக் கருத்துகள் வெளிவந்துள்ளன. உண்மை காண அறிஞர் முயலல் வேண்டும்"

— திரு. வி. க.

திருவள்ளுவர் கூறும்

# மூவர் யார்?

புலவர் மு. தெய்வநாயகம்

தமிழ் இலக்கியக் கழகம்

# திருவள்ளுவர் கூறும்

# "மூவர்" யார்?



புலவர் மு. தெய்வநாயகம், பி. ஏ.,
தமிழ்த்துறை, இலயோலாக் கல்லூரி,
சென்னை-34.

தமிழ் இலக்கியக் கழகம்,
திருச்சி—620001.

முதற்பதிப்பு — 1974



விலை ரூ. 2 - 50

திரு. வி. க.

"திருவள்ளுவர் உள்ளத்தைக் காண்டல் அருமை யாகவே தோன்றுகிறது. எவரை உளங்கொண்டு ஆசிரியர், "மூவர்க்கும்" என்று அருளினரோ தெரியவில்லை. இதுபற்றி யான் பல முறை நினைந்ததுண்டு. என்னுள்ளத்தில் எத்துணை யோ பொருள்கள் தோன்றித் தோன்றி மறைந்தன. திருவள்ளுவர் கூறிய "மூவர்" என்னை எங்கெங்கோ ஈர்த்து ஈர்த்து அலைத்தனர். அவர் வழங் கிய காட்சிகளோ பலப்பல."



அச்சிட்டோர் : கிரேசு டைப்போகிராபி, சென்னை-7.

# பதிப்புரை

புலவர் தெய்வநாயகம் யாத்துள்ள குறள் ஆராய்ச்சி நூல்களுள் 'மூவர் யார்?' என்னும் நூலை வெளியிடத் தமிழ் இலக்கியக் கழகம் முன் வந்துள்ளது. சிலருக்கு ஆசிரியர் கருத்தும் விளக்கமும் ஏற்புடையனவாய் இல்லாவிடினும், ஆய்வுக்குரியன என்று ஏற்கப்பாலன. இந் நூலைப் பயில்வோர் பல்வேறு குறள்களில் மல்கிக் கிடக்கும் சிக்கல்களையும் ஆய்ந்தறிந்து மெய்ப்பொருள் காண மிகவே முயல்வர் என்பது திண்ணம். பலர் இதற்குமுன் தாங்கள் அறியாதிருந்த புதுப் பிரச்சனைகள் குறள் ஆராய்ச்சியில் புதைந்து கிடப்பதை உணர்ந்து மேலும் ஆய்வு நடத்த ஊக்கம் பெறுவர் என நம்புகிறோம்.

ஆழியின்கீழ் ஆணி முத்தாய் அமிழ்ந்து கிடந்த இப்புதுக்கருத்துகளை உய்த்துணர வாய்ப்பளிக்கும் இந்நூலை இயற்றித் தந்த ஆசிரியருக்கு நன்றி கூறி, தமிழ் மக்கள் அனைவரும் இதனை வாங்கி வாசித்துப் பயனடையுமாறு வேண்டுகிறோம்.

திருச்சி,
11-2-'74.

இங்ஙனம்,
**தமிழ் இலக்கியக் கழகம்**

# என்னுரை

எனது ஆய்வைப் பற்றி, ஆய்வில் சிறந்து நிற்கும் பேராசிரியர், க. ப. அறவாணன் கீழ்க்கண்டவாறு கருத்துத் தெரிவிக்கின்றார்.

''திரு மு. தெய்வநாயகம், 'திருவள்ளுவம் கிறித்தவம்' என்னும் யாரும் தீண்டாத் தலைப்பில், யாரும் வேண்டாத் தலைப்பில் தன்னை ஒருமுகப்படுத்திக் கொண்டிருக்கிறார்.''

முன்னுரை — 'சான்றோர் யார்?'

ஆம், என்னையறியறியாமலே யாரும் தீண்டாத, யாரும் வேண்டாத இவ்வாய்வில் நான் ஈடுபட்டது முதல் இதுவரை நடைபெறும் நிகழ்ச்சிகளைத் தொகுத்து எழுதினால், அது மிகவும் சுவை மிக்க ஒரு நாவலாக அமையும் என்பதில் ஐயமில்லை. அவற்றை ஒருமுறை எண்ணிப் பார்க்கிறேன்... நான் சந்தித்த, என்னைச் சந்தித்த பல வித உள்ளங்கள்; அவ்வுள்ளங்களின் உணர்ச்சி வேறுபாடுகள்; அவ்வுணர்ச்சி வேறுபாடுகளிலிருந்து எழுந்த கருத்துகள்; எழுத்துகள்; பேச்சுகள் எல்லாம்—விந்தையான உலகமாகும்.

'நமக்குத் தெரியாத கருத்துகளையா இவன் கூறிவிடுவான் என எண்ணும் அதிகம் படித்த உள்ளம்;

புத்தகங்களையும் படியாமல் கருத்துகளையும் கேட்காமல் முன் முடிவு செய்து கொள்ளும் ஒருதலையுள்ளம்;

இவன் என்ன கூறினாலும் சரி, அதை மறுத்துத்தான் ஆக வேண்டும் என எதிர்த்து நிற்கும் எதிர்ப்புள்ளம்;

குறள்பால் பற்றுக் கொண்டு, ஐயோ திருக்குறள் அழிந்து விடுமே எனவாடி அதனால் எதிர்க்க எண்ணும் குறள் உள்ளம்;

ஐயோ! தமிழ்ப் பண்புக்கு இதனால் இழுக்கு வருமே; ஆகவே இதை எதிர்ப்பதே தமிழ்ப்பணி என நினைத்துச் செயல்படும் தமிழ்ப் பற்றுள்ளம்'

ஆகிய பல உள்ளங்களைச் சந்திக்கிறேன்.

இவ்வாய்வின் முதல் நூலை எழுதி முடித்த பின்னர்த் தமிழும் கிறித்தவமும் நன்கு கற்ற பெரியவர்களிடம் இதைக் குறித்துக் கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்ளுவதே சிறந்தது என எண்ணி, அத்தகுதியுடைய பெரியவர்களுக்காக முயன்றேன். எனது நெருங்கிய நண்பரான ஓய்வு பெற்ற

கல்லூரித் தலைவர் ஒருவர், அவர் அறிந்த கிறித்தவத் தமிழ்ப் பெரியார் ஒருவரிடம் என்னை அனுப்பினார். மிக முயன்று அக் கிறித்தவப் பெரியாரைச் சந்தித்தேன். நான் எழுதி முடித்திருந்த கையெழுத்துப் பிரதியை அவருக்குக் காட்டி அவருடன் கருத்துப் பரிமாற விரும்பும் எனது எண்ணத்தைத் தெரிவித்தேன். தலைப்பைக் கேட்டதுமே இடி இடிக்கத் தொடங்கியது.

பெரியவர்: "நீ என்ன கிறித்தவர்களுக்கும் மற்றத் தமிழர்களுக்கும் இருக்கும் நல்லுறவைக் கெடுத்து, இந்த நாட்டில் கிறித்தவர்களுக்கு நெருக்கடியை ஏற்படுத்த விரும்புகிறாயா?"

நான்: "அப்படி இல்லை ஐயா, எனது ஆராய்ச்சியில் கிடைத்த கருத்துகளைத்தான், எனக்குத் தெரிந்த அளவில் ஆராய்ச்சி என்னும் முறையில் எழுதியுள்ளேன். தயவு செய்து அதைக் கேட்டுப் பின்னர்த் தங்கள் கருத்தையும் குறையையும் கூறுங்கள். தங்கள் கருத்தைக் கேட்பதற்காகவே தங்களை நாடி இவ்வளவு தூரம் வந்திருக்கிறேன்."

பெரி: "ஓகோ! எங்களுக்கெல்லாம் தெரியாத கருத்தை நீ எழுதி விட்டதாக நினைக்கிறாயா? நல்லது! நல்லது! நான் என்ன படித்திருக்கிறேன் தெரியுமா? தமிழில் மிக அதிகம் என்ன பட்டம் பெற முடியுமோ அதைப் பெற்றவன். நான் போய்ச் சாதாரணப் புலவனாகிய நீ எழுதியதை வாசித்துத் தான் திருக்குறளைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டுமா? கிறித்தவத்திலும் நான் கொண்டுள்ள நிலை உனக்குத் தெரியும். நீ கிறித்தவ சாத்திரங்களைப் படியாத சாதாரண ஆள். ஆகவே, நீ எழுதியிருக்கிற கருத்துகளை வாசித்த பின்பு தான் திருக்குறளைப் பற்றியும் கிறித்தவத்தைப் பற்றியும் நான் அறிந்து கொள்ள வேண்டுமா? இது சரியான வேடிக்கை. போ பா ... போ! கிறித்தவத்திற்கும் திருக்குறளுக்கும் எந்தத் தொடர்புமே இல்லை. வீண்வேலைகளில் இறங்காதே. ஏதாவது நல்ல வேலைகளில் நேரத்தைச் செலவு செய். போ ... போ..."

நான்: "ஐயா, சில பகுதிகளை வாசிக்கிறேன் அதைக் கேட்ட பின்னர், நீங்கள் கூறும் குறைகளைத் தாழ்மையோடு ஏற்றுக்கொள்ளுகிறேன்."

பேரி: "நான் சொல்லச் சொல்ல நீ பேசுகிறுய்! பெரிய அதிகப் பிரசங்கியாய் இருக்கிருயே! நீயாகப் போக மாட்டாய் போல இருக்கிறதே! ...

இப்படிக் கூறிய அப்பெரியவர் அந்த அறையின் விளக்கை அணைத்துவிட்டு வெளியே சென்று விட்டார். இருட்டில் தடவித் தடவி எனது புத்தகத் தாள்களைச் சேர்த்துக் கொண்டு, தட்டுத் தடுமாறி வெளியே வந்து சேர்ந்தேன். மீண்டும் வெளியே சந்தித்த அவர், "இப் புத்தகத்தை வெளியிட்டாயானுல் எல்லோரும், பிய்த்துப் பிய்த்து எடுத்து விடுவோம்" என்ருர. பிய்க்கப்பட இருப்பது நானு? புத்தகமா? என்பது எனக்கு விளங்கவில்லை. சிரித்துக் கொண்டே நடையைக் கட்டினேன்.

மீண்டும் அவருடன் நான் சற்றும் எதிர்பாராப் பல நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன. இங்கு விரிப்பின் பெருகும்.

அண்மைக் காலத்தில் அப்பெரியாருடன் தொடர்பு நெருங்கியது. உண்மையில் அவரும் நல்லவரே. அவர் புதிதாகத் தெரிந்து கொள்ள வேண்டியது எதுவும் இல்லை என்பதை மட்டும் உறுதியாக நம்புகிருர். கிறித்தவத்தையும் திருக்குறளையும் பற்றிக் கேட்பவர்களுக்கெல்லாம் கிறித்தவத் தமிழறிஞர் என்னும் முறையில் கருத்து வெளியிடுகின்ருர். எனது எட்டுநூல்கள் வெளிவந்து அவை அவர் கையில் கிடைத்த பின்னரும் அவர் இதுவரை ஒரு நூலைக்கூட முழுமை யாகப் படிக்கவில்லை என்பதை மகிழ்ச்சியுடன் கூறுகிருர். படிக்கும்படியாக அவற்றுள் எதுவும் இல்லை, இருக்கவும் முடியாதுஎன்பது அவரது அசைக்க முடியா நம்பிக்கை.

முன் கூறப்பட்ட மூன்ரும் உள்ளம் எதிர்க் கட்சியைப் போன்றது. கருத்து மேலும் மேலும் வளரப் பயன்படுவது. பகை உள்ளமாக மாருத வரை இது சிறப்புக்குரியதே. ஆனுல், இறுதி இரண்டு உள்ளங்களும் திருக்குறள்பாலும், தமிழ் மேலும் கொண்டுள்ள பற்றின் காரணமாக எதிர்க்க நினைப் பவை. அவற்றிற்குத் தலை வணங்க வேண்டுவது தமிழனின் கடமை.

இந்த ஆராய்ச்சியால் திருக்குறள் அழிந்து விடுமா? தமிழ்ப் பண்புக்கு இழுக்கு வருமா?

இவ்வாராய்ச்சியின் முதல் நூலாகிய 'திருவள்ளுவர் கிறித்தவரா ?' என்னும் நூலை எத்தனையோ இடையூறுகளுக்கிடையில், அச்சிட்டு நூல் வடிவில் எடுத்துக் கொண்டு முன்னுரைக்காகப் பல பெரியவர்களிடம் சென்றேன். அவர்களுள் ஒரு தமிழ்ப்பெரியார் கூறிய கருத்து இன்னமும் எனது காதில் ஒலித்துக் கொண்டிருக்கிறது.

"ஐயா, நீங்கள் திருவள்ளுவர் கிறித்தவர்தான் என நிலைநாட்டுவதில் எனக்கொன்றும் மறுப்பு இல்லை. ஆனால் அப்படித் தாங்கள் நிலைநாட்டினால் அதன்பின் நடக்க இருப்பதை எண்ணித்தான் மிகவும் வருந்துகிறேன். சைவர்கள் பொதுவாகக் கம்ப இராமாயணத்தைப் படிப்பதில்லை. காரணம் அது ஒரு வைணவ நூல். அவ்வாறே வைணவர்கள் பெரியபுராணத்தைப் படிப்பதில்லை. காரணம் அது சைவநூல். ஆனால், எல்லோரும் விரும்பிப் படிக்கும்படியாகப் பொது என வைக்கப்பட்டிருப்பது திருக்குறள் ஒன்றே. அதையும் தாங்கள் கிறித்தவ நூல் என நிலைநாட்டி விட்டால் தமிழகத்தில் பெரும்பான்மையினராக இருக்கும் கிறித்தவரல்லாத தமிழர்கள் அதைக் கற்க மாட்டார்களே. அதனால், அதனுடைய சிறப்புக் குன்றிவிடுமே. இதை நினைக்கும் பொழுதுதான் மிக வருந்துகிறேன்."

எனக் கூறினார்கள். அதைக் கேட்டவுடன் எனக்கும் கூடக் கொஞ்சம் வருத்தமாகத்தான் இருந்தது. "இப்படிப்பட்ட நல்ல தமிழறிஞர்களின் உள்ளம் வருந்தும்படியான ஒரு துறையில் இறங்கியிருக்கிறோமே? அதிலும் நம்மால் திருக்குறளுக்கு ஆக்கத்திற்குப் பதிலாக அழிவு வரும் என உளப்பூர்வமாக நம்புகிறார்களே" என்பதே காரணம்.

அடுத்த நூலுக்கு முன்னுரை கொடுத்த தமிழறிஞர் (கிறித்தவர் அல்லர்) கூறிய கருத்து நான் முந்திய தமிழறிஞரிடம் எடுத்துச் சொல்ல முடியாது திகைத்ததையே வெளிக்காட்டுவதாய் இருந்தது.

"ஆராய்ச்சி என்னும் முறையில் நேர்மையான ஆய்வுக்குட்பட்ட எக்கருத்தினையும் வரவேற்கின்றேன். உங்கள் ஆராய்ச்சி முடிவு உண்மையில் தமிழுக்கும் திருக்குறளுக்கும் மிக்க உயர்வைக் கொண்டு வருவதாக இருப்பதால் நான் மகிழ்ச்சியோடு அதை வரவேற்கிறேன். ஆதரிக்கிறேன்.

"உங்களுடைய நூல்கள் யாவும் மேலை மொழிகளில் மொழி பெயர்க்கப்பட வேண்டும். அப்பொழுதுதான் தமிழ னைப் பற்றியும் தமிழைப் பற்றியும், தமிழின் தலைசிறந்த நூலாகிய திருக்குறளைப் பற்றியும் உலகமெல்லாம் நன்கு தெரிந்து பாராட்ட வாய்ப்பு ஏற்படும்.

"வள்ளுவன் தன்னை உலகினுக்கே தமிழ்த்தாய் தந்திருந் தாலும், உலகத்திலுள்ளவர்கள் யாவரும் அவ்வள்ளுவனை உரிமை பாராட்டிப் பயிலுவதற்கு உங்கள் நூல்களே அடிப் படையாய் அமைகின்றன.

"வள்ளுவர் சைவர் என நிலைநாட்டப்படுமானால் தமிழகத் திலுள்ள சைவர்களாகிய மக்களே உரிமை பாராட் டுவார்கள். வைணவர் என்றால், இந்தியாவிலுள்ள மக்களில் ஒரு பகுதியினர் மட்டும் உரிமை பாராட்டிப் பயிலுவர். சமணர் என்றால் குறைவான மக்களே உரிமை பாராட்டிப் பயிலுவர். ஆனால், அவர் ஒரு கிறித்தவர் எனக் கூறும் பொழுது உலகின் எல்லா நாடுகளிலும் வாழ்கின்ற, இன்று உலக சமயங்களில் பெரிய சமயத்தைச் சார்ந்த பெரும்பான்மையின ரான பல கோடிக் கிறித்தவர்கள் உரிமை பாராட்டிப் பயிலு வார்கள் அப்போது தமிழுக்கும், தமிழனுக்கும், ஒரு உயர்வு ஏற்படவும், திருக்குறளுக்கு உயர்வு ஏற்படவும் வழி ஏற்படும்.

"இன்று திருக்குறள் உலக மொழிகள் பலவற்றில் மொழி பெயர்க்கப்பட்டிருந்தாலும், ஆர்வமுடன் அதை உரிமை பாராட்டிப் படிப்பவர் சிலரே. உங்கள் நூல்கள் மொழி பெயர்க்கப் படுமானால் திருக்குறளை உரிமை பாராட்டிப் படிப்போர் எண்ணிக்கை பல்கோடியாக உயரும். ஆகவே, உங்கள் கருத்துகளைத் தமிழ் மேலும், திருக்குறள் மேலும் உள்ள பற்றின் காரணமாகவும் முழுமனதுடன் ஆதரிக் கிறேன். அவை மேலை நாட்டு மொழிகளில் மொழிபெயர்க் கப்பட வேண்டும்" எனஅவர் கூறிமுடித்தார்.

குறளின் மீதுள்ள பற்றின் காரணமாகவே முந்திய அறிஞர் இவ்வாராய்ச்சியைக் கண்டு அஞ்சினர். அதே பற்றின் காரணமாக, அதிலும் தமிழன், தமிழ் மீதுள்ள பற்றின் காரணமாகவே இவ்வாராய்ச்சியைப் பாராட்டுகிறார் இந்த அறிஞர் பெருந்தகை.

இந்த இரண்டு அறிஞர் பெருமக்களின் உள்ளங்களும் தமிழ் உள்ளங்கள்; தமிழ் மீது அடங்காக் காதல் கொண்ட உள்ளங்கள். ஒன்று அச்சம் கொள்ளுகிறது. மற்றது உவகை கொள்ளுகிறது. நான் என் செய்வது !

இனி இந்த நூலுக்கு வருகிறேன். 'மூவர் யார்'? என்னும் இந்நூல் இவ்வாய்வு வரிசையில் ஏழாவதாக வெளி வருவது. இத்துடன் இணைந்தே 'அருட்செல்வம் யாது?' என்னும் எட்டாவது நூலும் வெளிவருகிறது. வள்ளுவர் கூறும் மூவர், பாயிரம் முடிந்து நூலின் முதற்குறட்பாவில் இருப்பதால் பாயிரத்தையும் நூலையும் தொடர்பு படுத்தும் இணைப்புப் பாலமாக இம்மூவர் விளங்குகிறார். இம்மூவரைப் பற்றிய பல்வேறு கருத்துகளுள் எனது கருத்தும் இணைகிறது. காய்தல் உவத்தல் அகற்றி ஆய்வதே அறிவு; ஆராய்ச்சி.

திருக்குறள் பற்றிய எனது கருத்து ஏற்றுக்கொள்ளப் பட்டேயாக வேண்டும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. எனக்குத் தோன்றிய கருத்தை வெளியிட்டு விட்டேன். இத் துடன் எனது கடமை முடிந்தது. இக்கருத்து நேர்மையுள்ள தாயின் யாராலும் அழிக்க இயலாது. நேர்மையற்றதாயின் யாராலும் நிலைநிறுத்தவும் இயலாது. கருத்தின் உயிர்த் திறனாகிய உண்மையைத்தேர்ந்தறியக் காத்திருக்கிறது கால வெள்ளம். கருத்து உயிரோட்டமுடையதாயின் இன்று அது சிறியதாயினும் வெள்ளத்தில் எதிர் நீச்சல்போட்டுக் கால வெள்ளத்தினாலே வளர்க்கப்பட்டுப்பல்கிப் பெருகி நிலைநிற்கும். உயிரற்றதாயின் வெள்ளத்தால் அடித்துச் செல்லப்பட்டு மண்ணினுள் புதைக்கப்பட்டுமட்கி மறைந்து விடும். கருத்துகளைக்கால வெள்ளத்திற்கே ஒப்படைக்கிறேன்.

'மூவர் யார்?' 'அருட்செல்வம்' யாது?' ஆகிய இரு நூல்களையும் வெளியிடத் துணிவுடன் முன் வந்துள்ள தமிழ் இலக்கியக் கழகத்தாரைப் பாராட்டுவதோடு, இவை இரண்டை யும் வாக்கியச் செம்பம் செய்து அச்சுப்பிழை நீக்கிப் பதிப்பிக்க அருள் கூர்ந்து இசைவு தந்த பைந்தமிழ்ப் பாவலர் பேராசிரியர் அ. கி. பரந்தாமனார், எம். ஏ. அவர்களுக்கு எனது பணிவான நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

மு. தெய்வநாயகம்

# உள்ளே

# ''மூவர்'' யார்?

## சிக்கல்கள் ஏன் ?

ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இயற்றப்பட்ட திருக்குறளை இன்று நாம் பயிலத் தொடங்குங்கால், நமக்குப் பல சிக்கல்கள் தோன்றுகின்றன. நமக்கு ஏற்படும் சிக்கல்களை நீக்கும் பொருட்டாக நாம் உரையாசிரியர்களிடம் செல்லுங்கால் சிக்கல்கள் மேலும் பெருகுகின்றனவேயன்றிக் குறைந்த பாடாய் இல்லை. உரையாசிரியர்களும், வள்ளுவருக்கு ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிற்பட்டவர்களாகையால் வள்ளுவரின் உள்ளக் கருத்தை உணர முடியா நிலையிலேயே உரைவகுத்துச் சென்றுள்ளமையை அவர்களுடைய உரைகளே காட்டி நிற்கின்றன. இதுதான் சிக்கலுக்குக் காரணம். இந்நிலையில் திருக்குறளில் நமக்கு ஏற்படும் சிக்கல்களைக் களைவது எவ்வாறு? நாமே அச்சிக்கல்களை களைய முயற்சி செய்வதைத் தவிர நமக்கு வேறு வழி இல்லையன்றோ ?

சிக்கல்கள் ஏன் ? அவை வந்த விதம் என்ன ? இவை சிந்திக்கத் தக்கவை. முதலில் சிக்கல்களை ஒவ்வொன்றாக நோக்குவோம்.

## 2 சிக்கல்—1

திருக்குறளின் முதல் அதிகாரமாகிய கடவுள் வாழ்த்திலேயே சிக்கல் தொடங்கிவிடுகிறது. வள்ளுவர் எல்லாவற்றையும் கடந்து நின்று யாவற்றையும் கடவுகின்ற கடவுளை 'ஐந்தவித்தான்' எனப் பெயரிட்டுக் குறிப்பிடுகிறார்.

> பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
> நெறிநின்றார் நீடுவாழ் வார்.

ஐந்தவித்தான் என்னும் இச்சொல் தமிழ் உலகிலேயே வள்ளுவரால் மட்டுமே ஆக்கப்பட்டுக் கடவுளுக்குச் சூட்டப்பட்டுள்ளது. வள்ளுவருக்குப் பின்னர் வந்த புலவர்களுள் எவருமே இச்சொல்லை ஆளாது விட்டு விட்டதும் விந்தையாக உள்ளது

'ஐந்தவித்தான்'—பொருள் யாது ?

'அவித்தான்' என்பதற்கு 'அடக்கியவன்' எனப் பொருள் கூறப்படுகிறது. இது சரிதானா ? கடவுளை 'ஐம்புலனையும் அடக்கியவன்' எனச்சிறப்பித்துக் கூறுவது பொருந்துமா ? அது கடவுளுக்குச் சிறப்பைக் கொடுப்பதா ? இழிவைக் கொடுப்பதா? அடக்கமுடியாத நிலையில் அல்லற்படும் ஒருவனுக்கு அடக்கல் கைவரப்பெறுதல் சிறப்பாகக் காணப்படலாம். இந்நிலை இறைவனுக்குப் பொருந்துமா ? "கீழே விழாமல் நேராக நிற்கிறான்" என்பது தவழும் நிலையிலிருந்து வளரும் குழந்தையைக்கண்டு உவகையுடன் கூறிய மொழியாக இருக்கலாமேயன்றி ஏறுபோல் பீடுநடைபோடும் வீரன் ஒருவனைக்கண்டு கூறிய மொழியாகுமா ? வாலிபனைக்கண்டு கூறிய மொழியாக இருக்குமானால் அது அவனை நகைப்புக்

கிடமாக்கும் மொழியாகவன்றோ திகழும்? அவ்வகையிலேயே ஐம்புலன்களையும் அடக்கமுடியாமல் திண்டாடிய இறைவன் ஐம்புலன்களையும் அடக்கி வெற்றிபெற்றான் என்பதைக் குறிப்பாகத்தானே 'ஐந்தவித்தான்' விளங்குகிறது. ஐந்தடக்கினான் எனபதாலேயே ஐம்புலன்களையும் அடக்கமுடியாமல் தவித்தான் என்ற நிலையும் இறைவனுக்கு இருந்தது எனக் கூறுவதாக அமைகின்றதன்றோ! அஃது எங்ஙனம் பொருந்தும்?

ஐந்தவித்தான் எனக் கடவுளைக் குறிப்பிடும் வள்ளுவர்,

> ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும் புளார்கோமான்
> இந்திரனே சாலுங் கரி.

என்னும் குறளில் நீத்தாரையும் அப்பெயராலேயே குறிப்பிடுவது பொருந்துமா? நீத்தாரும், கடவுளும் 'ஐந்தவித்தான்' என்னும் நிலையில் ஒன்றானவர்களா? ஒன்றானவர்களாகவே இருப்பார்களானால் "கடவுள் வாழ்த்து" "நீத்தார் பெருமை" என்னும் இருவேறு அதிகாரங்கள் ஏன்? நீத்தார் கடவுளின் வேறாகிய துறவியையன்றோ குறிப்பதாகக் கொள்ளப்படுகிறது? நீத்தார் கடவுளின் வேறாகிய துறவியையே குறிக்குமானால் துறவிகளைப்பற்றியே முழுவதும் விளக்கிக் கூறப்படும். துறவறவியலில் எந்த ஓர் இடத்திலும் 'ஐந்தவித்தான்' என்னும் சொல்லை வள்ளுவர் கையாளாது விட்டது ஏன்?

ஐம்புல அடக்கத்தைப்பற்றி மிக விரிவாகக்கூறும் பிற்காலச் சமய இலக்கியங்களிலும், அவற்றிற்கு முன்னருள்ள சங்க இலக்கியங்களிலும் இச்சொல் எந்த ஒரு புலவராலுமே கையாளப்பட வில்லையே. ஏன்? தமிழகத்தில் இதுவரை தோன்றியுள்ள

பல்லாயிரக்கணக்கான பைந்தமிழ்ப் பாவலர்களுள் வள்ளுவரைத் தவிர வேறு யாருமே இச்சொல்லைப் பயன்படுத்தவில்லையே. காரணம் என்ன? இச் சொல் வள்ளுவரால் ஆக்கப்பட்டுக் கடவுளுக்கும் நீத்தாருக்கும் மட்டுமே பயன்படுத்தப்பட்டுள்ளதே யா்கும். அதன் சிறப்பு என்ன? நீடு வாழ்வைத்தரும் பொய்தீர் ஒழுக்க நெறியைக் காட்டிய கடவுளாகிய ஐந்தவித்தான் யார்? அகல் விசும்புளார் கோமான் சான்றாகத் தன் ஆற்றலை வெளிக்காட்டிய நீத்தாராகிய ஐந்தவித்தான் யார்? ஐந்தவித்தான் இறைவனா? மனிதனா? ஐந்தவித்தான் யார்? ஐந்தவித்தான் என்னும் சொல்லுக்குப் பொருளென்ன?

ஆராய்ச்சி அறிஞர்களுக்குச் சிக்கலை ஏற்படுத்தும் ஐந்தவித்தான் யார்? ;—

1. "காலமும், வருங்கால ஆராய்ச்சிகளுமே தான் ஒரு வேளை (ஐந்தவித்தானைப்பற்றிய) அப்பழங் கால மரபை நமக்குக் கட்புலப்படுத்த வேண்டும்."

பன்மொழிப் புலவர் அப்பாதுரையார்.

2. "ஆயினும் ஐந்தவித்தானைப்பற்றி ஆசிரியர் கருதிய கதை ஒன்றிருத்தல் வேண்டும்—அது இன்று அறியப்படவில்லை."

—பாவாணர்.

3. "இக்குறளின் பொருள் முடிபை நோக்க, இது இடைச் செருகல் போலக் காணப்படுகிறது."

—இலக்குவனார்.

4. "The word 'ஐந்தவித்தான்' is intriguing and rather jarring, not to say inappropriate, if literally

interpreted as some commentators and translators have done with reference to God the Alimighty.

If applied to Mahavira or Lord Budha or to Jesus Christ its literal meaning, namely one who has scorched or scotched one's five senses, might hold good. But used with reference to God the Supreme, it will be absurd, nay blasphemous."

—Thiruvachaka Mani — Tirukkural Translation
Page 282-283

(சரியான பொருளை அறிய முடியாச் சூழலில் நமக்கு ஏற்பட்டுள்ள சிக்கலை நாம் மறைமுகமாகத் தெரிவிக்க நமக்குப்பயன்படும் சொற்களில் சில 'பிற்சேர்க்கை', 'இடைச்செருகல்', 'பாடபேதம்' என்பனவாகும்).

## 3. சிக்கல்—2

ஐந்தவித்தான் என்பது முதல் சிக்கல். அதனை யடுத்தெழும் சிக்கல் 2-ம் அதிகாரத்தலைப்பு ஆகும். முதல் அதிகாரத்தில் கடவுளை வாழ்த்திய வள்ளுவர் இரண்டாம் அதிகாரத்தில் வானைச் சிறப்பிக்கக் காரணம் என்ன? 'ஐந்தவித்தான்' என்ற நிலையால் முதல் அதிகாரமாகிய கடவுள் வாழ்த்தும், மூன்றும் அதிகாரமாகிய நீத்தார் பெருமையும் இணைக்கப்படுமானால் அவர்களுக்கிடையே சிறப்பிக்கப்படும் இவ் 'வான்' எது? இது கடவுளுக்கு அடுத்த படியாகவும், நீத்தாருக்கு மேலாகவும் சிறப்பிக்கும் படியாக அமைக்கப்பட்டிருக்கக் காரணம் என்ன? 'வான்' மழையைக் குறிக்குமானால் மழைக்கு அத்துணைச் சிறப்புக் கொடுப்பது பொருந்துமா? படைத்

தவனை வாழ்த்தும் வள்ளுவர் அவருடைய படைப் புப் பொருளாகிய மழையை இறைவனுக்குச் சம மாக இணைத்து வாழ்த்துவது பொருந்துமா? நிலம் நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய ஐம் பெரும் பூதங்களுள், ஒன்றை மட்டுமே வள்ளுவர் இவ்வளவு சிறப்பிக்கிறார் என்பது பொருந்துமா? நீர் மட்டுமே சிறப்புடையதா?. நீரின்றிச் சில நாள்களாவது உயிர்வாழலாம், காற்றின்றி சில நிமிடங்கள் கூட உயிர் வாழ முடியாதே. அவ் வாறிருக்கக் காற்றைச் சிறப்பிக்காமல் நீரைச் சிறப்பித்தார் என்பது பொருந்துமா? சிலப்பதி காரம் போன்ற நூல்களில் கடவுளை வாழ்த்தாமல், திங்கள், ஞாயிறு, மழை, பூம்புகார் போன்ற படைப்புப் பொருட்களையே வாழ்த்துவதில் கூட மழைக்கு முதலிடம் கொடுக்கப்படவில்லையே ஏன்?

> "நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
> வானின் றமையா தொழுக்கு."

என இவ்வதிகாரத்தின் மணிமுடியாக முடித் துக்காட்டப்படும் குறட்பாவிலுள்ள 'வான்' மழைக் குப் பொருந்துமா? நீர், வான் இரண்டிற்கு முள்ள வேற்றுமை என்ன? மழை இல்லாவிட்டால் எப் படிப்பட்டவர்களானாலும் ஒழுக்கத்தைக் கைவிட்டு விடுவார்களா? "ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்" எனக் கூறும் வள்ளுவர் இங்கே பொருந்தாக் கருத்தைப் பொருந்தா முறையில்தான் கூறி யுள்ளாரா? பொருத்தமின்மை வள்ளுவரிடமா? பொருள் காணும் நம்மிடமா? கடவுளிடம் இணைந்த சிறப்புள்ள எவ்வளவு சிறந்தவர்களுக்கும் ஒழுக்கம் அமைய ஆணிவேராய் நிற்கும் 'வான்' எது?

## 4. சிக்கல்—3

மூன்றும் சிக்கலே ஏற்படுத்துவது மூன்றும் அதிகாரம் ஆகும். பாயிரத்தின் மூன்றும் அதிகாரத்தில் நீத்தார் பெருமைப்படுத்தப்படுகிறுர். நீத்தார் என்பவர் யார்? 'நீத்தார்' என்பது இல்லறத்தினின்றும், துறந்து சென்ற துறவியைக் குறிப்பதாகக் கொள்ளப்படுகிறது. இது பொருந்துமா? இல்லறம் துறவறம் ஆகிய இரண்டனுள் வள்ளுவர் சிறப்பிப்பது எதனை? துறவறத்தைத்தானு? வள்ளுவர் துறவறத்தையே சிறப்பித்தார் எனில் நூலுள் "அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை" எனக் கூறி இருப்பது பொருந்துமா? இல்லறம், துறவறம் ஆகிய இரண்டனுள் வள்ளுவர் முதலில் இல்லறத்தையே ஏற்றிப் போற்றுவது ஏன்? அதனுடனு அமைகிறுர் வள்ளுவர்?

*அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றின் புறத்தாற்றிற்*
*போஒய்ப் பெறுவது எவன்.*

எனக்கேள்விக்கணைகளையும் தொடுக்கும் வள்ளுவர் பாயிரத்தில் இல்லறத்தைக் கூருது துறவறத்தையே பெருமைப் படுத்தியிருக்கிறுர் என்பதும், அதிலும் கடவுளுடன் இணைத்துப் பெருமைப்படுததுகிறுர் என்பதுடன், கடவுளுக்குக் கொடுக்கப்பட்ட 'ஐந்தவித்தான்' என்னும் பெயராலும் துறவியை குறிப்பிடுகிறுர் என்பதும் எவ்வாறு பொருந்தும்?

இருமை வகைதெரிந்து ஈண்டு அறம் பூண்டார், ஒழுக்கத்து நீத்தார், செயற்கரிய செய்வார், ஆற்றல் நிறைந்த ஐந்தவித்தான், நிறை மொழிமாந்தர், குணமென்னுங்குன்றேறி நின்ருர், மற்றெவ்வுயிர்க்

கும் செந்தண்மை பூண்டொழுகும் அறவோர் என்பனயாவும் துறவியாகிய மனிதனுக்குப் பொருந்துமா ?

பொருந்தாவெனில் கடவுளுடன் இணைத்துப் பெருமைப்படுத்தப்படும் நீத்தார் யார் ?

## 5 சிக்கல்—4

நாலாவது சிக்கலைக் கொடுப்பது நான்கு அதிகாரங்களையுடைய பாயிர அமைப்பு முறையாகும். பாயிரத்தின் இலக்கணமாகிய

> ''தெய்வ வணக்கமும் செயப்படு பொருளும்
> எய்த உரைப்பது பாயிரமாகும்.''

என்பதன்படி தெய்வ வணக்கமாகிய கடவுள் வாழ்த்தும், செயப்படு பொருளாகிய அறன் வலியுறுத்தலும் பாயிரத்திற்குப் போதுமல்லவா ?

தெய்வ வணக்கமாகிய கடவுள் வாழ்த்துடன் இடையே இணைந்து நிற்கும் 'வான்சிறப்பு', 'நீத்தார் பெருமை' ஏன் ? பாயிரத்தின் முதல் மூன்று அதிகாரங்களும் தெரிவிக்கும் பொருள் யாது ? வள்ளுவரைத் தவிரத் தமிழகத்தின் வேறு எப்புலவருமே பாயிரத்தை இம்முறையில் அமைக்கவில்லையே. ஏன்? வள்ளுவர் மட்டுமே தனித்து விளங்குவது எவ்வாறு? யாது காரணம் பற்றி வள்ளுவர் இவ்வாறு அமைத்துள்ளார் என்பதுபற்றித் தக்க விளக்கமும் விடையும் நெடுங்காலமாகவே கிடைக்கவில்லை என்பது மு. இராகவையங்கார் அவர்களின் கருத்தாகும்.

"தெய்வப் புலமைத் 'திருவள்ளுவர், தம் பெருநூற்றொடக்கத்தே கடவுள் வாழ்த்து, வான் சிறப்பு, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல் என்ற நான்கதிகாரங்களை மட்டும் பாயிரமாகத் தனியே நிறுத்திக் கூறினரன்றே? இங்ஙனம் இந்நான்கதிகாரங்களை மட்டும் வள்ளுவனார் தனியே கொண்டது எக்காரணம் பற்றி என்ற கேள்வி நெடுக நிகழ்ந்து வருவதுண்டு. இதற்குத் தக்க விடை இதுகாறும் பெறப்பட்டதில்லை."

மு. இராகவய்யங்கார்—தொல்காப்பியப்
பொருளதிகார ஆராய்ச்சி.

கடவுள் வாழ்த்தில் கடவுளுக்கு இடப்பட்டுள்ள பெயரும், நீத்தார் பெருமையில் நீத்தாருக்கு இடப்பட்டுள்ள பெயரும் ஒன்றுகவே 'ஐந்தவித்தான்' என விளங்குவதாலும், இவ்விரண்டிற்கும் இடையே யார், யார் ஒழுக்கத்திற்கும் இன்றியமையாத வான் சிறப்பிக்கப்பட்டுள்ளமையாலும் கடவுள், வான், நீத்தார் ஆகிய முதல் மூன்று அதிகாரங்களுமே தெய்வ வணக்கந்தானு? அதாவது கடவுளின் மூன்று வகைத் தனிச் சிறப்புக்களை வள்ளுவர் வாழ்த்திச் சிறப்பித்துப் பெருமைப்படுத்துகிறாரா? இதை விளக்கவே வள்ளுவர் "ஐந்தவித்தான்" என்ற சொல்லைப்படைத்து முதல் மூன்று அதிகாரங்களையும் இணைத்துக்கோக்கும் இணைப்பாகப் பயன்படுத்தியுள்ளாரா?

பாயிரத்தின் முதல் மூன்று அதிகாரங்களாலும் வாழ்த்திச் சிறப்பித்துப் பெருமைப்படுத்தப்படும் பாயிர இலக்கணத்திற்கிசைந்த தெய்வ வணக்கமாக நிற்கும் கடவுள், வான், நீத்தார் ஆகிய மூவர் யார்?

## 6 சிக்கல்—5

இப்போது பாயிரத்தின் நான்கு அதிகாரங்களையும் முடித்து, நூலினுள் நுழையும் நமக்கு ஐந்தாம் அதிகாரத்தின் முதற்குறட்பா சிக்கலை ஏற்படுத்தி விடுகிறது. இது திருக்குறளின் முதற்பாலாகிய அறத்துப்பாலின் முதல் இயலாகிய இல்லறவியலின் முதல் அதிகாரமாகிய இல்வாழ்க்கையின் முதல் குறட்பாவாகும். அது இது :

''இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றி னின்ற துணை''

இச்செய்யுள் பற்றித் தமிழ்த்தென்றல் திரு. வி. க. அவர்களின் கருத்தைப் புத்தக முகப்பில் காண்கிறோம்.

''இங்கே ஒரு சிக்கல் உள்ளது. அது ''மூவர்க்கும்'' என்னும் சொல்லைப் பற்றியது. ''மூவர்க்கும்'' என்பது பற்றிப் பலவிதக் கருத்துகள் வெளிவந்துள்ளன. உண்மை காண அறிஞர்கள் முயலல்வேண்டும். பாட பேதமிருக்குமோ என்றும் யான் ஐயுறுவதுண்டு''

திருக்குறள் விளக்க உரை—திரு. வி. க. பக். 440

இக்குறளில் தமிழ்த்தென்றல் அவர்களுக்கு ஏற்பட்ட சிக்கலின் அளவு எவ்வளவு என்பது நமக்கு நன்கு விளங்குகிறது. இச் சொற்களுக்கு அவர்கள் கண்ட எப்பொருளுமே பொருந்தாக் காரணத்தால் அச்சொல் அவ்விடத்திற்குரியதுதானா என்னும் அளவுக்கு அச்சொல் மீதே அவர்களுக்கு ஐயம் ஏற்பட்டு விடுகிறது. அதாவது வள்ளுவர் உள்ளத்தைத் தெள்ளிதின் உணராமல் அச்சொல்லுக்குப் பொருள் காண்பது அரிது என்பதை அவர்கள் நமக்குத் தெரிவிக்கின்றார்கள்.

"ஆசிரியர் உள்ளத்தைக் காண்டல் அருமையாகவே தோன்றுகிறது. எவரை உளங்கொண்டு ஆசிரியர் "மூவர்க்கும்" என்று அருளினரோ தெரியவில்லை. இதுபற்றி யான் பலமுறை நினைத்ததுண்டு. என் உள்ளத்தில் எத்தனையோ பொருள்கள் தோன்றித் தோன்றிமறைந்தன. திருவள்ளுவர் கூறிய 'மூவர்' என்னை எங்கெங்கோ ஈர்த்து ஈர்த்து அலைந்தனர்."

திரு. வி. க. திருக்குறள் விளக்கவுரை பக்கம்—443

ஆம், வள்ளுவர் உள்ளத்தை உள்ளபடியே நாம் உணர முடியாதவரை அவர் கூறிய சொற்கள், மெய்ப்பொருள் காணும் அவா வுடைய நம்மை எங்கெங்கோ ஈர்த்து, ஈர்த்து அலைக்கும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. இதை உள்ளபடியே உணர்ந்து, இதை எவ்வித போலிப் போர்வை கொண்டும் மறைக்காமல் அப்படியே வெளிப்படுத்தி உள்ளார் தமிழ்த் தென்றல். இம்மயக்கம் பழைய உரையாசிரியர்களுக்கும் இருந் தது என்பது தமிழ்த் தென்றலின் கூற்று.

"மூவர்க்கும்" என்னும் சொற்குப் பொருள் காண் பதில் பழைய உரையாசிரியர்களுக்குச் சிறிது மயக்கம் தோன்றியிருக்கும் என்பது அவரவர் உரைகளால் தெரி கிறது."

விளக்கவுரை பக்.—441

இவ்வளவு தூரம் அல்லற்படுத்தி அலைக்கும் அச்சிக்கல்கள் நிறைந்த சொல்லை இப்பொழுது நோக்கி உரையாசிரியர்களால் நம்மை ஏன் நிறைவு படுத்த முடியவில்லை என்பதையும் கவனிப்போம்.

**இயல்புடைய மூவர்!**

> **இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்**
> **நல்லாற்றின் நின்ற துணை.**

**பரிமேலழகர்** : "இல்லறத்தோடுகூடி வாழ்வா னென்று சொல்லப்படுவான் அறவியல்பினையுடைய ஏனை மூவர்க்கும் (அவர் செல்லும்) நல்லொழுக்க நெறிக்கண் நிலைபெற்ற துணையாம்.

ஏனைய மூவராவார் — ஆசிரியனிடத்தினின்று ஓதலும் விரதங் காத்தலுமாகிய பிரமசரிய ஒழுக் கத்தானும், இல்லைவிட்டுத்தீயோடு வனத்தின்கட் சென்று மனையாள் வழிபடத் தவஞ்செய்யும் ஒழுக் கத்தானும், முற்றுந் துறந்த யோக ஒழுக்கத்தானும் என இவர். இவருள் முன்னையிருவரையும் **பிறர் மதம் மேற்கொண்டு கூறினர்**"

**குறிப்புரை :** வை. மு. கோபாலகிருஷ்ணமாசார்யார்.

"திருவள்ளுவர் 'இல்லறம்,' 'துறவறம்' என இருவகை **ஆசிரமமாகவே வகுத்துக்கொண் டாராதலால்,** மற்றையிரண்டாசிரமத்தையுங் கூட்டி "மூவர்க்கும்" என்றது பிறர் மதத்தை அங்கீ கரித்ததாயிற்று."

## 7. பரிமேலழகர், உரை பொருந்துமா?

மேலே நாம் காணும் பரிமேலழகர் விளக்கப்படி பிரமசாரி, வானப்பிரத்தன், சந்நியாசி ஆகிய மூவருமே இயல்புடைய "மூவராகக்" கொள்ளப் படுகின்றனர். இங்கு வடமொழியாளரின் நெறி யாகிய பிரமசாரி, கிருகத்தன், வானப்பிரத்தன்

சந்நியாசி ஆகிய நால் வருண ஆசிரம நெறி சுட்டப் படுகிறது. வள்ளுவர்க்கு இந்த நால்வகைப் பிரிவு உடன்பாடன்று. அவர் இல்லறம், துறவறம் ஆகிய இருவகைப் பிரிவையே ஏற்றுக் கொண்டவர். அவை களையே தம் நூலுள் கூறியுள்ளவர். பரிமேலழகர் இதை நன்கு உணர்ந்திருந்தபோதிலும், அவராலும் இயல்புடைய மூவர் யாவர் என்பதைக் காண முடியாத காரணத்தால் தமக்குத் தெரிந்த வழியில் உரை கூறுகிறார் எனலாம். ஏனெனில் தமது உரை வள்ளுவர் கருத்திற்கு முற்றிலும் முரண்பட்டிருத்தலை நன்கறிந்த பரிமேலழகர், அதற்கு ஒரு அமைதி கூறுகின்றார். "**பிறர்மதம் மேற்கொண்டு கூறினார்**" என்பதே அது. அதாவது வள்ளுவர் மதத்திற்கும் இக்கொள்கை கூறும் மதத்திற்கும் எவ்வித உடன்பாடும் இல்லை. ஆயினும், இவ்விடத்தில் வள்ளுவர் தம் மதத்தைக் கைவிட்டுப் பிறர் மதம் மேற்கொண்டு கூறுகிறார் என்பது பரிமேலழகர் கூறும் அமைதி. பாயிரத்தைக் கூறி முடித்து, அறத்தின் இருபகுதியாகிய இல்லறம், துறவறம் ஆகிய இரண்டனுள், இல்லறத்தைக் கூறத் தொடங்கிய வள்ளுவர், எடுத்த எடுப்பிலேயே தம் மதத்தைக் கைவிட்டுத் தமக்கு முற்றிலும் முரண்பட்ட பிறர் மதம் மேற்கொண்டு கூறுவாரா ?

அறம் நான்கு வகையன்று, அது இல்லறம், துறவறம் ஆகிய இரண்டு வகையே எனக்கூறும் முகத்தான் இல்லறத்தின் மேன்மையைக் கூறும் முதற் குறட்பாவிலேயே அவ்வாறுதான் கூறினார் என்பது சற்றேனும் பொருந்துமா? எல்லாவகையிலும் பொருந்துவதற்குச் சிறிதும் இடம் இல்லையன்றோ ?

"திருவள்ளுவர் பிராமணீயம் என்னும் ஆரியத்தை ஒழிக்கவே நூல் செய்தாராதலின், பிரமசரியம், வானப்பிரத்தம், சந்நியாசம் என்னும் முந்நிலைப்பட்ட பிராமணரைக் காத்தலைத் தமிழ் வேளாண் கடமையெனக் கூறியிரார் என்பது தெளிவுறு தேற்றமாம்."

தேவநேயப் பாவாணர்—தமிழ் மரபுரை. பக். 60

பரிமேலழகர் கூறும் இவ்வுரை சிறிதும் பொருத்த மற்றது என்பதை இதற்கு அடுத்த குறட்பாவே விளக்கி நிற்கிறது. எவ்வாறு?

வள்ளுவர் தம் மதத்தைக் கைவிட்டுப் பிறர்மதம் மேற்கொண்டு இயல்புடைய மூவராக பிரமசாரி, வானப்பிரத்தன், சந்நியாசி ஆகிய மூவரையே கூறியிருப்பாராஞல் அடுத்த குறட்பாவாகிய

"துறந்தார்க்கும் துவ்வா தார்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை"

என்பதில் சந்நியாசி என்னும் வட மொழியின் தமிழ் மொழி பெயர்ப்பாகிய துறந்தார் என்பதை மீண்டும் கூறியிருப்பாரா ?

"எவர் எப்பொருள் கூறினும் கூறுக. அது தொடர்ந்துவரும் இரண்டு பாக்களின் கருத்துடன் முரண்படலாகாது பழைய உரையாசிரியர்கள் கூறும் பொருளில் 'சந்நியாசி' ஒருவர் விளங்குகிறார். தொடர்ந்து வரும் பாட்டின் தொடக்கத்திலேயே "துறந்தார்" வீற்றிருக்கிறார். அச்சந்நியாசி யார் ? இத்துறந்தார் யார் ? இங்கே வடமொழி தென்மொழி வேற்றுமையன்றி வேறு வேற்றுமை உண்டோ ?"

திரு. வி. க. திருக்குறள் விரிவுரை—பக். 441

ஆகவே 'இயல்புடைய மூவர்'' என்பதற்கான பரிமேலழகரின் உரை சிறிதும் பொருத்த முடையது அன்று என்பது உறுதிப்படுகிறது. எனவே பரிமேலழகரைப் பின் பற்றி உரை கூறியவர்களின் கூற்றும், பரிமேலழகர் கருத்தையே தமிழ்ப்படுத்தி மாணவர், தொண்டர், அறிவர் எனக் கூறுபவர் களுடைய உரையும் பொருத்தமற்றவை என்பது வெள்ளிடை மலே.

பரிமேலழகரைப் பின்பற்ருது தாங்களாகவே புத்துரை காண முயன்ற அறிஞர் பெருமக்களின் உரைகளே நோக்குவோம். அப்பெருமக்கள் அரிதின் முயன்று தனியுரை கூறியுள்ளார்கள். அவை பொருந் தும் உரையாகக் காணப்படாமையால் அவைகளே மறுக்க வேண்டிய நிலேயில் அப்பெருமக்களின் பெயர் களே வெளியிடுவது விரும்பத்தக்கதன்று. ஆகவே அன் ஞர் வெளியிட்டுள்ள கருத்துகளே மட்டும் நோக்கு வோம்.

இதுவரை வெளிவந்த கருத்துகளே ஒன்ருகத் திரட்டிஞல் அவை ஏழுவகையாக விளங்குகின்றன.

அவை:—

மூவர்;
1. வருகுறட்பா குறித்த மூவர்.
2. உறவினர், நண்பர், ஏழைகள்.
3. தாய், தந்தை, மனைவி.
4. பெற்ருேர், மனைவி, மக்கள்.
5. அந்தணர், அரசர், வணிகர்.
6. சேரர், சோழர், பாண்டியர்.
7. அறவோர், ஒழுக்கத்து நீத்தார், அந்தணர்.

## 8 வருகுறட்பா குறித்த மூவர்

"வள்ளுவர் பாயிரத்தை முடித்து நூல் தொடங்கியதுமே இயல்புடைய மூவர் என ஒரு தொகை கொடுக்கின்றார், அத்தொகை உரையாசிரியர்கள் கொடுக்கும் விளக்கத்துடன் எவ்விதத்திலும் ஒருங்கிணையவில்லை, அத்தொகையால் வள்ளுவர் குறிப்பிடும் மூவர் யார் என்பதும் விளங்கிக் கொள்ள இயலவில்லை. யாரைக் கொண்டு அங்கு இணைத்துப் பார்த்தாலும் அவ்விடத்திற்குப் பொருந்தவும் இல்லை. இந்நிலையில் வள்ளுவரிடமே இதற்கு விடையைக் கேட்பதைத்தவிர வேறு வழியில்லை. வள்ளுவரிடம் சென்றால் தொகையாக முதற்குறட்பாவில் கூறிய கூற்றுக்கு விடையை வருகுறட்பாவில் வகையாக வைத்துள்ளார்.

> "துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
> இல்வாழ்வான் என்பான் துணை".—42

முதற் குறட்பாவிற்கு விளக்கம் கொடுப்பதற்கே இது எழுதப்பட்டது என்பதை நாம் உணர்ந்து கொள்ளும் வகையில் அவ்வளவு சிறப்பாக இணைப்பாக இக் குறட்பா விளங்குகிறது.

"இல் வாழ்வான் என்பான் துணை" என்பது இரண்டு குறட்பாக்களிலுமேயுள்ள மகுடதொடர்.

> இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
> நல்லாற்றின் நின்ற துணை.

> துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
> இல்வாழ்வான் என்பான் துணை.

ஆகவே, பொருளில் எவ்வித வேற்றுமைக்கும் இட மின்றி முதற் குறட்பாவில் தொகையாகவும் இரண் டாம் குறட்பாவில் வகையாகவும் கூறியுள்ளார் வள்ளுவர். ஆகவே, இயல்புடைய மூவர் என்பது "துறந்தார், துவ்வாதார், இறந்தார் ஆகிய மூவரை மட்டுமே குறிப்பவையாகும்" என்பதே வரு குறட்பா குறித்த மூவர் எனக் குறிப்பிடும் அறிஞர்களின் கொள்கையாகும்.

இக் கொள்கை சரியானதுதானா? ஆழ்ந்து நோக்கவேண்டிய ஒன்று.

இரண்டு குறட்பாக்களும், வகை தொகை என்பதைத் தவிர வேறெவ்விதத்திலுமே வேற்றுமை யில்லையானால், அதாவது இரண்டு குறட்பாக்களும் ஒரே கருத்துடையனவே என்றால், இன்னும் விரிவா கச் சொன்னால் முதற் குறட்பாவுக்கும் இரண்டாம் குறட்பாவுக்கும் கருத்தில் எவ்வித வேற்றுமையும் புதுமையும் இல்லையானால், முதல் குறட்பா விளக்க முடியாததை (தொகை) இரண்டாம் குறட்பாவே விளக்குவதாக இருந்தால் (வகை) இரண்டு குறட் பாக்கள் ஏன்? என்னும் கேள்வி எழுகின்றது. 'முதற் குறட்பா ஐயத்திறகிடமானது. இரண்டாம் குறட் பாவே விளக்கம் தருவது' என்றால், 'முதல் குறட்பா அங்கிருக்க வேண்டிய இன்றியமையாமை என்ன? இரண்டாம் குறட்பா சொல்லாததென்ன புதுமையை முதற் குறட்பா விளக்குகிறது? முதற் குறட் பாவையே முழுவதாக நீக்காவிட்டால் ஏற்படும் இழப்பு என்ன? இழப்பு எதுவுமே இல்லையானால் அக்குறட்பாவினால் எந்தப் பயனுமே இல்லையா? திருவள்ளுவர் பாயிரத்தை முடித்து நூலின் முதற் குறட்பாவாகப் பாடியது எவ்விதப் பயனுமற்ற ஒன்றைதானா? நூலுக்குரிய பத்துக் குற்றங்களுள்,

நின்று பயனின்மை என்னும் குற்றமுடைய குறட்பா தான் வள்ளுவரின் முதற் குறட்பாவா?' என்னும் கேள்விகள் இங்கே எழுகின்றன,

முதற் குறட்பா 'நின்று பயனின்மை' என்னும் குற்ற முடையதுதான், வள்ளுவர் நூல் முதலிலேயே குற்றமுடையதுதான், வள்ளுவர் குற்ற முடைய நூலை இயற்றிய குற்றவாளிதான்' என ஒப்புக்கொண்டால் அன்றி, 'வருகுறட்பா குறித்த மூவர்' என இயல்புடைய மூவர்க்கு விளக்கம் கொடுத்தல் இயலாது. நமக்கு விளங்கவில்லை என்பதற்காக வள்ளுவர் மேல் குற்றம் கூறலாமா?

"ஒரு சில இடங்கள் கூறியது கூறல் போலத் தோன்றினும், அவற்றுள்ளும் சொல்லும் முறையில் சில சிறு வேறுபாடுகளைக் காணலாம்...

'கூறியது கூறினும் குற்றம் இல்லை
வேறொரு பொருளை விளக்குமாயின்'

என்றபடி வேறு வகையான குறிப்புப் பொருளுக்கு இடமாக ஆசிரியர் வள்ளுவர் தம் பாடல்களை அமைத்தார் என்று கொண்டே அவற்றை நாம் ஊன்றி நோக்குதல் வேண்டும். அவ்வாறு காண்கின்ற போது, இதுவரை காணாத புதுமைகள் அதாவது புதுப்பொருள்கள், புதுக் கருத்துகள் முதலியன எல்லாம் புலப்படுதல் திண்ணம். அதனால்தான் இன்னும் புத்துரைகளுக்கும் புதுமைக் கருத்துகளுக்கும் குறள் இடம் தந்து நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது."

—புலவர் மு. சண்முகம் பிள்ளை-திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி சென்னைப் பல்கலைக் கழகம் - திருக்குறள் அமைப்பும் முறையும் — பக் 208.

முதற்குறட்பாவில் 'மூவர்' என்று மட்டுமே கூறாது 'இயல்புடைய மூவர்' எனக்கூறியிருப்பதுடன் முதற் குறட்பா குறிக்கும் இயல்புடைய மூவரினும் மாறுபட்டவர்களே, வருகுறட்பா குறித்த மூவர் என்பதை விளக்கவே 'துறந்தார்க்கும், துவ்வாதவர்க்கும், இறந்தார்க்கும்' என இம் மூவர்க்கும் எவ்வித அடைமொழியும் கொடாமல் கூறியிருப்பதும் நோக்கத்தக்கது. அடைமொழியின்றிக் கூறப்படும் துறந்தார், துவ்வாதார், இறந்தார் ஆகிய இம் மூவரிலும் மாறுபட்டவர்களே 'இயல்புடைய மூவர் என்பதை விளக்கவே, 'இயல்புடைய' என்னும் அடைமொழி நிற்கிறது இன்னொரு வேறுபாட்டை 'நல்லாற்றின் நின்ற' என்னும் தொடர் விளக்கிக் காட்டுகிறது. இரண்டாம் குறளில் அடைமொழியின்றித் 'துணை' எனக் கூறும் வள்ளுவர், முதற்குறட்பாவில் 'நல்லாற்றின் நின்ற' என்னும் தொடரை இணைத்துக் கூறுகிறார். ஆகவே, இரண்டாம் குறளுக்கு இல்லாத 'இயல்புடைய' "நல்லாற்றின் நின்ற" என்னும் தொடர்கள் முதற் குறட்பாவின் சிறப்பையும் அச்சிறப்பினையுடைய மூவரையும் இரண்டாம் குறளிலிருந்து தெளிவாகப் பிரித்துக் காட்டுகின்றன.

இங்கே சிறப்பாகப் பயன்படுத்தப்படும் 'இயல்பு', 'நல்ல ஆறு' ஆகிய இவ்விரண்டின் சிறப்பைவிளக்கவே கீழ்வரும்இரண்டு குறட்பாக்கள் இவ்வதிகாரத்திலேயே பாடப்பட்டுள்ளன.

"இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாம் தலை." —47

"ஆறறின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை யுடைத்து." —48

ஆகவே, இயல்புடைய மூவர், வருகுறட்பா குறிக்கும் மூவர் அன்று என்பதும், அவர்களினும வேறுபட்ட சிறப்புடையவரே இம் மூவர் என்பதும் தெளிவு.

"மூவர் என்பது வருகுறட்பாவில் குறித்த மூவரையே தொகுத்துரைத்ததாகக் கொண்டார். இது சிறப்புரை அன்று."

—மணிவிளக்கவுரை II பக் 46.

இப்போது அடுத்த உரையைப் பார்ப்போம்.

## 9. உறவினர், நண்பர்கள், ஏழைகள்.

'இயல்புடைய மூவர்' என்பதை உளத்திற் கொண்டு "இயல்பாகவே ஒருவனோடு தொடர்புடையவர்கள் அவனுடைய உறவினரும், நண்பருமாவர். இத்துடன் அவன் ஏழைகளுக்கு இயல்பாகவே நன்மை செய்யக் கடமைப்பட்டுள்ளமையால் ஏழைகளையும் சேர்த்து இவனோடு இயல்பாகத் தொடர்புடையவர் இம் மூவரும்" எனப் பொருள் சொளளப்பட்டது. இல்வாழ்வான் இயல்புடைய இம்மூவருக்கும் நல்லாற்றின் நின்ற துணையாவான் என்பது பொருத்தமாக இருப்பதாகவும் எண்ணப்பட்டது. இது பொருந்துமா?

## 10. தாய், தந்தை, மனைவி.

இப்பொருள் கூறும் அறிஞர்கள், 'இயல் புடைய மூவர் என்பது இல்வாழ்வான் ஒருவனுக்கு இயல்பாகவே தொடர்புடைய மூவா என்பது

இல்வாழ்வான் துணையாக இருக்க வேண்டிய கட்டாயக் கடமையையுடைய மூவர் யாவர்' என எண்ணி, இவன் இவ்வுலகில் தோன்றுவதற்குக் காரணமான இவனுடைய பெற்றோர் இருவரையும், இவன் இல்வாழ்வுக்குக் காரணமாக அமையும் இவனுடைய மனைவியையும் இணைத்து, தாய், தந்தை, மனைவி ஆகிய மூவரையும் இயல்புடைய மூவர் எனக் கொண்டு உரை கூறினர். இது பொருத்தமானது தானா ?

## 11. பெற்றோர், மனைவி மக்கள்.

இயல்பாகவே இல்வாழ்வானோடு தொடர்புடைய மூவர், இவன் இவ்வுலகில் இயல்பாகத் தோன்றுவதற்குக் காரணமான தாய், தந்தையர், இல்வாழ்க்கைக்குத் துணையாக இயல்பாகவே இருக்க வேண்டிய மனைவி, இல்வாழ்க்கையின் இயல்பான பலனாகிய மக்கள் ஆகியவர்களே எனக் காணும் அறிஞர் பெருமக்கள் இயல்புடைய இம்மூவர்க்கும் நல்லாற்றின் துணை நிற்கக் கடமைப் பட்டவன் இல்வாழ்வான் என்பானே எனக்கொண்டு உரை கூறினர். இது பொருத்தமான உரைதானா ?

இப்போது மேலே கண்ட மூன்று உரைகளையும் தொகுத்து நோக்குவோம்,

> உறவினர், நண்பர், ஏழைகள்.
> தாய், தந்தை, மனைவி.
> பெற்றோர், மனைவி, மக்கள்.

இம்மூன்று உரைகளும் 'இயல்புடைய' என்னும் சொல்லை அடிப்படையாகக் கொண்டு தோன்றி

யவை ஆகும். இயல்பாகவே இல்வாழ்வானோடு இவர்கள் தொடர்புடையவர்கள் என்பதில் எவ்வித ஐயமும் இல்லை. இவர்களுக்கு இல்வாழ்வான் துணையாக இருக்கவேண்டும் என்பதிலும் ஐயம் கொள்ளக் காரணம் இல்லை.

ஆகவே, இவர்களுக்குத் துணையாக இல்வாழ்வான் விளங்க வேண்டும் என இல்வாழ்வானின் கடமையைச் சொல்ல வேண்டியது, 'இல்வாழ்க்கை' யைக் கூறும் வள்ளுவர் கடமையுமாகும். வள்ளுவர் மற்றக்குறட்பாக்களில் அக்கடமையைக் கூறுவிடில் தொகையாகக் கூறியுள்ள இக்குறட்பாவில் அவர்களை வருவித்துப் பொருள் கூறுதல் பொருத்தமுடையதாகக் கொள்ளலாம். எனவே. 'வள்ளுவர் மற்றக் குறட்பாக்களில் இவர்களைக் கூறியுள்ளாரா ?' என்பது நோக்கத்தக்கது. இல்வாழ்வான் யார், யார்க்குத்துணையாக இருக்க வேண்டும் என்பதை இவ்வதிகாரத்தின் முதல் மூன்று குறட்பாக்களிலும் வரிசையாகக் கூறிச் செல்கிறார். அவற்றை நோக்குவோம்.

1. "இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
   நல்லாற்றின் நின்ற துணை."

2. "துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
   இல்வாழ்வான் என்பான் துணை."

3. "தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல்
   தான் என்றுங்கு
   ஐம்புலத்தாறு ஓம்பல் தலை."

மேலே காணும் மூன்று குறட்பாக்களின் வாயிலாகவும் மூவர். துறந்தார், துவ்வாதார், இறந்தார். தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல். தான்

ஆகிய பதினொரு பேருக்கும் இல்வாழ்வான் துணை யாக இருந்து ஓம்ப வேண்டும் எனக்கூறுகிறார் வள்ளுவர்.

இதிலே முதல் குறட்பா குறிக்கும் மூவர் யாவர் என்பதே கேள்வி. இக் கேள்விக்கு விடையாக உற வினர், நண்பர், ஏழைகள்-தாய், தந்தை, மனைவி-பெற்றோர், மனைவி, மக்கள் என்பது பொருந்துமா? இவர்கள் பின்னர் கூறப்படும் எண்மர்களில் அடங் காதவர்களா ? கூறப்படாதவர்களா ? இக்கருத்து ஆராயத்தக்கது.

வள்ளுவர் கூறும் 'ஒக்கல்' என்பதனுள் உற வினர், நண்பர், தாய், தந்தை, மனைவி, மக்கள் என் பவர்கள் எல்லாருமே அடங்கிவிடுவார்கள் அல்லவா? அவ்வாறே 'துவ்வாதார்' என்பதனுள் ஏழைகள் அடக்கப்பட்டு விடுகின்றார்கள் அன்றோ ?

ஆகவே, மேலே கூறியுள்ள மூன்று வகை உரை யும், பின்னர்க் கூறப்படும் குறட்பாக்களும், 'துவ்வா தார்', 'ஒக்கல்' ஆகிய இரண்டு பிரிவுக்குள் அடங்கி விடுகின்றன. எனவே, இயல்புடைய மூவர் என்பவர், இம்மூன்று உரையும் கூறும் மூவகையினர் அல்லர் என்பது தெளிவு. மேலும் 'நல்லாற்றின் நின்ற' 'இயல்புடைய' என்னும் தொடர்கள் பின்னர்க் கூறப்படும் எண்மருக்கும் இணைக்கப்படாததும் நோக்கத்தக்கது. ஆகவே, முதற்குறட்பா சுட்டும் இயல்புடைய மூவர், பின்னர் வரும் குறட்பாக்கள் சுட்டும் எண்மரினும் வேறானவர் என்பது கண்கூடு.

"மூவரைத்" தாய், தந்தை, மனைவி, என்றும், பெற் றோர், மனைவி, மக்கள் என்றும் கொள்வதும் பொருத்த

மானதாகத் தெரியவில்லை. என்னை ? பின்னே "தென்புலத்தார்.........." எனவரு உங் குறட்பாவில் "ஒக்கல்" இருத்தலான் என்க. "ஒக்கலுக்குப்பெற்றோர் முதலியோர் அடங்குதலை ஓர்க. 'ஒக்கலுக்கு' வேறு பொருள்காண முயல்வது வீண்.

—திரு. வி. க. திருக்குறள் விரிவுரை—பக்கம். 442

"இயல்புடைய மூவர் என்பதனை இல்லறத்துக்கு இயல்பான தொடர்புடைய மூவர் எனக்கொண்டு உறவினர், நண்பர் ஏழைகள் என்று பொருள் உரைத்தார். இது தீதற்ற உரையாயினும் வேள்ளையுரையாகக் கருதத்தக்கது."

—மணிவிளக்கவுரை— II பக்கம். 46

இனி அடுத்த உரையை நோக்குவோம்.

## 12. அந்தணர், அரசர், வணிகர்.

இல்வாழ்வானை வேளாளன் எனக்கொண்டு, நால்வகை வருணப் பாகுபாட்டின் அடிப்படையில் இயல்புடைய மூவர் என்பதற்கு அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் ஆகிய நால்வருள், இல்வாழ்வானாகிய வேளாளன் நீங்கலாகவுள்ள மூவர் கொள்ளப்பட்டனர்.

"வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான்" என்ற நல்லாதனார் கூற்றினையும் "இல்வாழ்வான்" என்பதனோடு ஒத்த 'குடியானவன்' என்னுஞ் சொல் உலக வழக்கில் உழவனையே குறித்து வருதலையும் நோக்கி இவ்வாறு கொள்ளப்பட்டதாகக் கூறப்படுகிறது. இது பொருந்துமா ?

இவ்வுரையில் பிறப்பால் ஏற்பட்ட பாகுபாடு நான்கும் (அந்தணர், அரசர், வணிகர், வேளாளர்), அறத்தால் ஏற்பட்ட பாகுபாடு இரண்டுடன் (இல்லறம், துறவறம்) இட்டுக் கலக்கப்படுகிறது. பிறப்பால் ஏற்பட்ட நால்வருணப் பாகுபாடு வள்ளுவர்க்கு உடன்பாடன்று. "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" என்பது வள்ளுவர் கொள்கை. பிறப்பால் ஏற்பட்ட நால் வருணப் பாகுபாடு வடமொழியாளரது எனவும், தொழிலால் ஏற்பட்ட நால்வகைப் பாகுபாடே தமிழர்க்குரியது எனவும் சிலர் வாதிடுவதுண்டு. தொழிலால் ஏற்பட்ட பாகுபாட்டை வடமொழியாளரைப் போன்றே நான்கு வகையாகக் கொள்ளக் காரணம் என்ன? தொழில் நான்கு வகை மட்டுமேதான் இருக்கிறதா? வள்ளுவர் எங்காவது தொழில் நான்கு வகை மட்டுமே எனப் பிரித்துக் காட்டியுள்ளாரா? நால் வகை மட்டுமே என்பது தமிழ் நாகரிகத்திற்குப் பொருந்துமா? தமிழில் பிறப்பால் நான்கு வகை என்னும் பாகுபாடு கூறுவது வடமொழியாளரைப் பின்பற்றிய பிரிவேயன்றி வேறென்ன? பிறப்பாலோ அன்றித் தொழிலாலோ கூறப்படும் நால்வகைப் பாகுபாடு வள்ளுவர்க்குச் சிறிதும் உடன்பாடுடையதன்று.

மேலும், தொழில் வேறு; அறம் வேறு. இல் வாழ்க்கையாகிய அறம், எல்லாத் தொழிலாளர்க்குமே உரிய பொதுவான அறமேயாகும். இல்வாழ்வானுக்குரிய தொழில்களில் வேளாண்மையாகிய உழவுத் தொழிலும் ஒன்று. அதே நேரத்தில் உழவுத தொழில் மட்டுமே இல்வாழ்வானுக்குரியதும் அன்று. நம் நாடு உழவுத் தொழிலை அடிப்படையாகக் கொண்ட நாடாகையால் இல்வாழ்வான் செய்யும் தொழில்களுள்

உழவுத் தொழிலை முக்கியமானதாக இருக்கலாம். உழவன் இல்வாழ்வானாகவும, இல்வாழ்வான் உழவனாகவும் இருக்கலாம், அதற்காக இல்வாழ்வான் என்பான் உழவுத் தொழிலாளிமட்டுமே எனக் கொண்டால் மற்றத் தொழிலாளர் அத்தனைபேரும் துறவறத்தைச் சேர்ந்தவர்களே எனக் கூறுவதாக முடியும் அன்றோ? இல்வாழ்வான் என்பவன் அறத்தின் ஒரு வகையைத் தன் வாழ்வாகக் கொண்டவன். உழவன் என்பவன் பலவகைத்தொழில்களுள் உழவுத் தொழிலைத் தன் வாழ்க்கைத் துணையாகக் கொண்டவன். எனவே, இல்வாழ்வான் உழவனே எனக் கொள்ளுதல் சரியன்று. பரிமேலழகரும் தம் உரையில் இல்வாழ்வானை நால் வகை ஆசிரம நிலையிலும் இல்வாழ்வானாகவே கொண்டார். அந்த ஒற்றுமை கூட இந்த உரையில் இல்லை. அடுத்தது "இயல்புடைய" என்னும் தொடரும் 'நல்லாற்றின் நின்ற துணை" என்னும் தொடரும் இவ்வுரையில் சிறிதும் பொருந்தவில்லை. அறம் வேறு; தொழில் வேறு அந்தணர், அரசர், வணிகர் ஆகிய மூன்று தொழில் செய்கிறவர்கள் மட்டுமே இயல்புடைய மூவர் என்பது எவ்வகையிலும் பொருந்துவது மன்று.

"பரிமேலழகரிடம் காணாத ஒரு பெருங்குறை அறிஞர் ஆராய்ச்சியில் இடம் பெறுகிறது. இல்வாழ்வான் என்பதைப் பரிமேலழகர் ஆசிரம நெறியிலும் இல்வாழ்வானாகவே (கிருகஸ்தனாகவே) கொண்டு ஏனை மூவர் என்றார். ஆனால், அறிஞரோ, "இல்வாழ்வான்" என்பதை வேளாளர் அல்லது உழவன் என்று வலிந்து எடுத்துக் கொண்டு 'ஏனை மூவர்' என்று வாதிடுகிறார்." அத்துடன் 'இயல்புடைய' என்னும் அடை பரிமேலழகர் வகையில் பொருந்துமளவு கூட அறிஞர் முடிபில் பொருந்தவில்லை."

—மணி விளக்கவுரை II பக்கம் 48.

# 13 சேர சோழ பாண்டியர்

"திருவள்ளுவர் காலத்தில் மூவேந்தர் இருந்தனர். அந் நாளில் ஊர் மன்றங்களில் மூவேந்தரென மூன்றறவோர் வீற்றிருந்து கடனாற்றி இருப்பர். அவரைத் திருவள்ளுவர் மூவேந்தர் நினைவுடன் 'மூவர்க்கும்' என்று குறித்திருக்கலாம் என்றும் எண்ணுகிறேன்."

என இவ்வுரை கூறும் அறிஞர் எழுது கின்றார். இவருடைய உரையில் இவருக்கும் ஐயப் பாடு உண்டு என்பதை, "குறித்திருக்கலாம் என்று எண்ணுகிறேன்." என்னும் அவருடைய முடிவுச்சொற் கள் நமக்கு காட்டுகின்றன. இவ்வாசிரியரும் பல் வேறு கருத்துகளையும் 'மூவர்' உடன் இணைத்து எது வும் பொருந்தாமையால் இப்படியும் இருக்கலாமோ என ஐயுற்று இக்கருத்தைக் கூறிச் செல்லுகின்றார். ஆகவே, 'இக்கருத்துதான் உறுதியானது' என்னும் உறுதிப்பாடு இவ்வுரை கூறும் ஆசிரியர்க்கும் இல்லை. இவ்வுரை பொருந்துமா ?

'திருவள்ளுவர் இயற்றிய திருக்குறள், ஒரு நாட் டுக்கோ, ஒரு மொழிக்கோ, ஒரு இனத்தவர்க்கோ சொந்தமன்று; உலகமக்கள் அத்தனை பேருக்கும் பொதுவானது' என அறிஞர் யாவரும் ஒருமுகமாய்க் கூறி வருகின்றனர். ஆகவே, நாமே வலிந்து அவர் நூலைத் தமிழ் நாட்டளவில் கட்டுப்படுத்தலாமா ?

"உலகுக்கென்று ஒரு நூலை அளித்த ஒருவரை ஈன்ற பெருமை தமிழ் நாட்டுக்கு உண்டு. இது குறித்துத் தமிழ் மக்கள் இறும்பூதெய்தலாம்; இறுமாப்படையலாம். ஆனால், திருவள்ளுவரைத் தமிழ்நாட்டளவில் கட்டுப்படுத்தலாகாது. அது தளையாகும் ; சிறையாகும்."

— திரு. வி. கலியாண சுந்தரனர் — டாக்டர் மு. வ. இயற்றியுள்ள திருவள்ளுவர் அல்லது 'வாழ்க்கை விளக்கம் நூலிலுள்ள அணிந்துரை.

ஆம்! திருவள்ளுவர் தமிழ்நாட்டில் வாழ்ந்திருந்தும், தமிழ் மொழியிலேயே தம் நூலை இயற்றியிருந்தும் தமிழ் முதல் எழுத்தாகிய 'அ' கரத்தில் தொடங்கி, தமிழ் இறுதி எழுத்தாகிய 'ன' கரத்தில் தம் நூலை முடித்திருந்தும், தமிழ் என்றோ, தமிழன் என்றோ, தமிழ்நாடுஎன்றோ, தமிழ்நாட்டின் மூவேந்தர்களான சேர, சோழ, பாண்டியர் என்றோ, தமிழ் நாட்டின் எந்த ஒரு பகுதியையோ, எந்த ஒரு ஊரையோ, எந்த ஒரு சிற்றரசனையோ குறிப்பிடாது உலகப் பொதுவாகவே தம் நூலை இயற்றி இருப்பது ஆழ்ந்து எண்ணத்தக்கது. இவ்வளவு சிறப்பாக எழுதியிருக்கும் வள்ளுவருக்கு உரை கூறுங்கால் அவரைத் தமிழ் நாட்டளவில் கட்டுப்படுத்தல் ஆகாது; அது தளையாகும், சிறையாகும்' என்ற திரு. வி. க. அவர்களின் கருத்து முழுமனதுடன் வரவேற்கத்தக்க தொன்றாகும்.

இரண்டாவதாக, 'ஆதிபகவன்' என்பதற்கு வள்ளுவருடைய பெற்றோர் எனப் பொருள் கொண்டதுபோலவே 'மூவர்' என்பதைச் சேர சோழ பாண்டியர் எனப் பொருள் கூறுவதும் விளங்குகிறது. தன் பெற்றோர்களையோ, தன் அரசர்களையோ வள்ளுவர் சுட்ட எண்ணியிருந்தால் அதற்குத் தகுந்த இடங்கள் உள்ளன.

மூன்றாவதாக, தமிழ் நாட்டின் எந்தப்பகுதியில் வாழ்ந்த தமிழனும் அவ்விடத்து அரசனாகிய ஒருவருடைய குடிமகனாகவே வாழ்ந்தானேயன்றி, மூவரசர்களுக்கும் குடிமகனாக வாழ்ந்ததாக வரலாறு இல்லை; ஏனெனில் மூவரசர்களுடைய கூட்டாட்சி நடந்ததாக வரலாறே இல்லை. ஆகவே, இல்வாழ்

வாஞகிய குடிமகன் சேர, சோழ, பாண்டியராகிய மூவரசருக்குத் துணை என்னும் கருத்துப் பொருந்துவ தன்று. ஒவ்வொருவனும் தன் அரசனுக்கு மட்டுமே துணையாக வாழ்ந்துள்ளான்.

நான்காவதாக, முந்திய உரையிலுள்ள குறை பாடு இவ்வுரையிலும் இருப்பது நோக்கத்தக்கது. இல்வாழ்க்கை, அந்தணர், அரசர், வணிகர், வேளா ளர் ஆகிய நால்வகைத் தொழில் புரிபவர்களிடம் இருப்பதுபோலவே, சேர, சோழ, பாண்டியர் ஆகிய மூவரசர்களிடம் இல்வாழ்க்கை உண்டு. ஆகவே, இல்வாழ்வான் என்பதனுள் அந்தணர், அரசர், வணி கர், வேளாளர் ஆகிய நால்வரும் உள்ளடங்கி விடு வதைப் போலவே, சேரர், சோழர், பாண்டியர் ஆகிய மூவரசர்களும் உள்ளடங்கி விடுகின்றனர். மூவரசர்களும் இல்வாழ்வார்களே. ஆகவே, அவர் கள் துணையாக நின்ற இயல்புடைய மூவர் அவரினும் வேறானவர்களேயாதல் வேண்டும்.

இயல்புடைய மூவராக மூவேந்தர் பொருந்தா மையைப் போன்றே, மூவேந்தரென வீற்றிருந்த மூன்றறவோரும் பொருந்தாதவராகின்றனர். மூவர் என்பது மூவரசர்களைக் குறிக்க வாய்ப்பில்லையன்றோ?

## 14. துறவோர், ஒழுக்கத்து நீத்தார், அந்தணர்

இவ்வுரையைக் கொண்ட அறிஞர் இவ்வுரை கொண்டமைக்காகக் கூறும் காரணம் :—

“இயல்புடை மூவர்” என்பது இங்கே, முப்பால் வாழ் வினைத் தோன்றாத் துணைகளாய் பின்னின்று இயக்குவிக்கும்

பண்பினையுடைய முப்பால் முதல்வர்களாகிய மூவரைக் குறித்தது. முப்பால்களிலும் தோன்றும் துணைகளாக முன்னின்று இயக்கும் தலைவர்களையும், பண்புகளையும் வள்ளுவர் முறையே, அறவாழ்வை உள்நின்று இயக்கும் துறவோர், பொருள் வாழ்வை உள்ளூர நின்றியக்கும் ஒழுக்கத்து நீத்தார், இன்ப வாழ்வை உள்ளூர நின்றியக்கும் அந்தணர் என்று வகுத்தனர். கடவுட்பண்புடைய இம்முதல்வர் மூவருக்கும் உலகவாழ்வில் ஆதாரமாய் உதவுபவன் இல்வாழ்வானே என்று இக்குறட்பா அவன் சிறப்புக் கூறிற்று.''

இதுவரை நாம் நோக்கிய உரைகளுக்கும் இப்பொழுது நாம் காணும் இவ்வுரைக்கும் ஒரு அடிப்படை வேற்றுமை இருக்கிறது. அது என்ன? இல்வாழ்வானொடொத்த மனிதர்களிலேயே இயல்புடைய மூவரை மற்ற உரை ஆசிரியர் யாவரும் தேடினர். ஆனால், இவ்வுரையாசிரியரோ அவர்களினின்றும் மாறுபட்டு, "கடவுட் பண்புடைய இம்முதல்வர் மூவர்" எனக் கூறுவதன் மூலம், மனிதனுக்கு அப்பாற்பட்ட நிலையிலே மூவரைத் தேடுகிறார். அதற்காக அவர் கூறும் காரணம் :— தோன்றாத் துணையாக நின்றே அவர்கள் இயக்குவதனால் அவர்களை இயக்கும் ஆற்றல் இயல்பு எனப்பட்டது." என்பதாகும். ஆகவே, இந்த இயல்பினையுடையவர்களை மனிதரிலே தேடுவது அருமையாகும். இவ்வாசிரியர் கடவுள் பண்புடைய இம்முதல்வர் மூவரையும், திருக்குறளில் 'இல்வாழ்க்கை' அதிகாரத்திற்கு முந்திய பகுதியாகிய பாயிரத்திலேயே தேடுகிறார்.

"துறவோர் அறவாழ்வின் ஆட்சியாளராக அறத்துப் பாலிலேயே சிறப்பறவியல் முழுவதும் குறிக்கப்படுவராவர். ஒழுக்கத்து நீத்தார் பொருட்பாற் பாயிர அதிகாரமாகிய ஒழுக்கத்து நீத்தார் அதிகாரத்தில் விளக்கப்பட்டனர்......

அந்தணர் அந்தண்மைப்பண்பே, இன்பத்துப்பால் பாயிர அதிகாரமான வான் சிறப்பில் மழை முகிலாகச் சுட்டப்பட்டது.''

இவ்வாசிரியர் கூற்றுச்சரிதானா?(1) இயல்புடைய மூவர் கடவுள் பண்பாளர் தாமா? (2) இவர்களைப் பாயிர அதிகாரங்கள் கூறுகின்றனவா? மேலே காணும் இரண்டு கேள்விகளையும் ஆராய்வோம்.

1. இயல்புடைய மூவர் கடவுட் பண்பாளர்தாமா?

'மனிதப் பண்பிலும் உயர்ந்த வேருன கடவுள் பண்பினர் தாம் இங்குச் சுட்டப்படுகிருரா? என்பதைக் காண, வள்ளுவர் கூறும் மற்ற எண்மர்களையும் நோக்க வேண்டும். அவ்வெண்மரில் கடவுட் பண்பாளர் சுட்டப்படுகின்ருரா? என ஆராய்வோம்.

எண்மர் = (1) துறந்தார் (2) துவ்வாதவர் (3) இறந்தார் (4) தென்புலத்தார் (5) தெய்வம் (6) விருந்து (7) ஒக்கல் (8) தான்.

## 15 "தெய்வம்" - கடவுளா?

மேலே நாம்காணும் எண்மரிலும், மனிதரினும் மாறுபட்டவர் என நாம் தெளிவாக அறியக்கூடிய 'தெய்வம்' இருக்கிறது. வள்ளுவர் கூறும் தெய்வமும், கடவுளும் ஒன்றுதானே? என்று எண்ணுவதற்கு நம்மைத் தூண்டுகிறது. 'தெய்வம்' என்பதற்கு உரையாசிரியர்கள் கூறும் பொருளை நோக்குவோம்.

| | | |
|---|---|---|
| 1 | பரிமேலழகர் | — தேவர். 'தெய்வம்' என்றது சாதிஒருமை. |
| 2 | மணக்குடவர் | — தேவர். |
| 3 | பரிதியார் | — வழிபடும் தெய்வம். |
| 4 | காலிங்கர் | — கடவுளர். |
| 5 | புலவர் குழந்தை | — தன் முன்னோர். |
| 6 | டாக்டர் மு. வ. | — தெய்வம். |
| 7 | பாவாணர் | — வழிபடும் தெய்வம். தெய்வம் என்றது அவ ரவர் உளநிலைக்கேற்ற வாறு சிறு தெய்வமும் பெருந்தேவனும் கடவுளுமாகிய மூவகைத் தேவுகளை. |
| 8 | மயிலை சிவமுத்து | — கடவுள் வணக்கம் (தென்புலத்தார்இறந்து தென்திசையில் கடவுளாக விளங்குபவர்) தேவர். |
| 9 | திரு.வி. கலியாண சுந்தரனுர் | — கடவுளுக்கு வழங்கப் படும் பொதுப் பெயர் களுள் ஒன்று. |
| 10 | பன்மொழிப் புலவர் கா. அ. | — இறைத் தொண்டின் புகழால் தெய்வமாக வணங்கப்படும் முன்னே ரைத் குறித்த சொல் ஆகும். |

மேலே நாம் காணும் உரையாசிரியர்கள் தேவர், தெய்வம், கடவுள், முன்னோர் ஆகிய நான்கு வகையாகப் பொருள் கூறுகின்றனர். இவற்றுள் தெய்வம் என்பதற்குப்பொருள் தெய்வம்

என்று கூறும் உரையை நீக்கினுல் மற்றவை மூன்று வகையில் அடங்குகின்றன. இவை மூன்றும் மூன்று நிலைகளைக் குறிக்கின்றன.

முன்னேர் — மனிதநிலை

தேவர் — மனிதனிலும் மேம்பட்ட நிலை, ஆனுல், கடவுள் நிலை அன்று.

கடவுள் — மனித நிலையிலிருந்து முற்றிலும் மேம்பட்ட நிலை; தேவர் நிலையிலிருந்தும் உயர்ந்த நிலை; முழுமுதற் கடவுள் நிலை.

இங்கே மூன்று நிலைகளும் இணைக்கப் படுகின்றன. இவற்றுள் மெய் உரை எது? வள்ளுவர் குறிப்பிடும் 'தெய்வம்' என்பதன் பொருள் யாது? விடையை வள்ளுவரிடமே கேட்போம். வள்ளுவர் 'தெய்வம்' என்னும் சொல்லைத் தம் நூல் முழுவதிலும் ஆறு இடங்களில் மட்டுமே ஆண்டுள்ளார். அவ்வாறு இடங்களையும் முறையே நோக்குவோம்.

1. "தென்புலத்தார் தெய்வம் விருந்துஒக்கல் [தான் என்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை."—43

2. "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்."—50

3. "தெய்வம் தொழாஅள் கொழுநன் [தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை."—55

4. "தெய்வத்தான் ஆகா தெனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்."—619

5. "ஐயப் படாஅது அகத்தது உணர்வானைத்
தெய்வத்தோடு ஒப்பக் கொளல்"—702

6. "குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்"—1023

**தெய்வத்திற்கு வள்ளுவர் கொடுக்கும் விளக்கம்**

1. வாழ்வாங்கு வாழ்பவன் தெய்வத்துள் வைக்கப்படுவான்.

2. கற்புடைப்பெண்டிர் தெய்வம் தொழாஅர்.

3. தெய்வத்தான் ஆகாததும் உண்டு.

4. ஐயப்படாது உணர்பவன் தெய்வத்தோடு ஒத்தவன்.

5. தெய்வம் மடிதற்று முந்துறும்.

மேலே வள்ளுவர் காட்டும் விளக்கங்கள், தெய்வம் என்பது முன்னோரையோ மனிதரையோ குறிக்க வில்லை என்பதைக் காட்டுகின்றன; மனிதர் உயர்ந்து தெய்வ நிலையை அடையலாம் என்பதையும் காட்டுகின்றன.

"தெய்வத்துள் வைக்கப்படும்"
"தெய்வத்தோடொப்பக் கொளல்"

என்னும் திருக்குறள் தொடர்களைக் காண்க.

தெய்வம் என்னும் சொல் முழுமுதல் கடவுள் என்னும் பொருளில் பொதுவாகப் புலவர்களால் ஆளப்பட்டிருந்தபோதிலும், வள்ளுவருக்கு அக் கருத்து உடன்பாடன்று என்பது கீழ்க்காணும் காரணங்களால் விளங்குகின்றது.

1. கடவுள் வாழ்த்து அதிகாரத்திலோ அத்துடன் இணைந்த வான்சிறப்பிலோ நீத்தார் பெருமையிலோ இச்சொல் வள்ளுவரால் ஆளப்படவில்லை.

2. கடவுளை வணங்காவிடில் பிறவிப் பெருங் கடலை நீந்த முடியாது எனக் கூறும் வள்ளுவர் கற்புடைப் பெண்டிர் தெய்வத்தை வணங்குவதில்லை எனக் குறிப்பிடுகிறார்.

3. கடவுளைத் தனக்குவமையில்லாதான் எனக் கூறும் வள்ளுவர், மனிதன் தெய்வத்தோடொத்தவன் எனக் கூறுகிறார்.

4. கடவுளால் எல்லாம் முடியும் எனக்கூறும் வள்ளுவர் தெய்வத்தால் ஆகாததும் உண்டு எனக் கூறுகிறார்.

ஆகவே, வள்ளுவர் காட்டும் தெய்வம் முழுமுதற் கடவுள் அல்லர் என்பது தெளிவு. அப்படியானல் வள்ளுவர் காட்டும் தெய்வம் யார்? வள்ளுவர் கடவுளையும், மனிதர்களையும் மட்டுமே கூருது இவ்விருவருக்கும் இடைப்பட்ட ஒரு கூட்டத்தையும் குறிப்பிடுகிறார். அவர்களே தேவர், வானோர், விசும்புளார், இமையார், புத்தேளிர், தெய்வம், புலவர் என வள்ளுவரால் குறிப்பிடப்படுகின்றார்கள்.

அவர்கள் வாழும் இடத்தை வள்ளுவர் வானகம், மேலுலகம், புத்தேளுலகம், புத்தேள் நாடு எனவும் கூறுகிறார்.

ஆகவே, 'தெய்வம்' என வள்ளுவரால் ஆளப் படும் சொல், மனிதனையோ கடவுளையோ சுட்ட வில்லை என்பதும், இவ்விருவருக்கும் இடைப்பட்ட தேவர்களையே இச்சொல் குறிக்கிறது என்பதும் தெளிவு

இப்பொழுது முதற்கேள்விக்கு வருவோம்.

இயல்புடைய மூவர் கடவுள் பண்பாளர்தாமா? ஆம்! என்று நாம் கூறுவதற்குத் தயங்கக் காரண மாய் இருந்தது 'தெய்வம்' என்னும் சொல்லே. இப் பொழுது தெய்வம் என்னும் சொல் குறிக்கும் பொருள் கடவுளை அன்று என்பதைக் கண்டோம். ஆகவே, இயல்புடைய மூவர் கடவுட்பண்பாளர்தாம் எனக் கொள்ளுவதற்கு நம்மைத் தூண்டுகிறது. இதை மேலும் ஆய்ந்தால்,

| | | | |
|---|---|---|---|
| இயல்புடைய மூவர் | 1. | இல்வாழ்வான் | அல்லன். |
| | 2. | துறவியும் | அல்லன். |
| | 3. | துவ்வாதார் | அல்லர். |
| | 4. | இறந்தார் | அல்லா. |
| | 5. | தென்புலத்தார் | அல்லர். |
| | 6. | தெய்வம் | அன்று. |
| | 7. | விருந்து | அன்று. |
| | 8 | ஒக்கல் | அன்று. |

இந்த எண்மரிலும் அடங்காதவர் யாவர்? கடவுள் இந்த எண்மரிலும் அடங்குகின்ருரா? என்ருல், இல்லை என்றே பதில் வருகிறதன்ருே? ஆகவே, இவ்வெண்மரிலும் அடங்காத இயல்புடைய மூவர் கடவுளே எனக்கொள்ளலாம் அன்ருே?

## 16. தென்புலத்தார் யார்?

தெய்வம் மனிதருக்கும் கடவுளுக்கும் இடைப் பட்ட தேவர்களைக் குறிக்குமாளுல் வள்ளுவர் கூறும் தென்புலத்தார் யாவர்?

தென்புலத்தாரைப் பிதிரர் எனப்பொருள் கூறி, 'பிதிரர்களாவார்' படைப்புக் காலத்தில் பிரமனுற் படைக்கப்பட்ட ஒரு தேவ சாதியார் எனவும், அவர் களுக்கிடம் தென்றிசையாதலால் தென்புலத்தார் எனப்பட்டார் எனவும் கூறுவர் ஆன்ருேர்" என விளக்கமும் கூறுவர் பரிமேலழகர்.

இவ்விளக்கமும், பொருளும் பிராமணீயத்தைப் பின்பற்றியதென்பதில் ஐயம் இல்லை. வள்ளுவருக் கும், இக்கருத்துக்கும் தொடர்பிருக்க வழியில்லை. பழைய உரையாசிரியரிடமிருந்து முரண்படும் இக் கால உரையாசிரியர் "தென்னுட்டினர்" எனவும், "தம் முன்னேர்" எனவும் பொருள் கூறியுள்ளனர். இக்கால உரையாசிரியர்களிடையே இச்சொல் லுக்குத் திரு. வி. க. அவர்களின் உரை சிறப்புற அமைந்துள்ளது எனலாம்.

"தென்புலத்தார் = அழகிய அறிவுடையார்.
தென் = அழகு. "தென்னிசை வனப்பும் தெற்குமோர்

பாடலும்'' பிங்கலந்தை.
புலத்தார். = புலவர், அறிவுடையோர் பக்-457

இறைவனையுணர்ந்த அறிவினையுடையோர் 'தென்புலத்தார்'' என வள்ளுவரால் குறிப்பிடப்படுகின்றனர் எனலாம்.

## 17. மூவர் கடவுளுக்குப் பொருந்துமா?

கடவுள் ஒருவரே. இங்கே மூவர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளதே அது பொருந்துமா? 'மூவர் என்பது கடவுளுக்குப் பொருந்துமா?

கடவுளை 'மூவராகிய முதற்கடவுள்' எனக் குறிப்பிடும் வழக்கமும், தொழுது வணங்கும் வழக்கமும் உண்டு என்பதைப் பரிமேலழகர் கூற்றினால் நாம் அறிகிறோம். பரிமேலழகர் கூற்றின்படி இயல்புடைய மூவராக விளங்கும் "**மூவராகிய முதற் கடவுளையே**'' வள்ளுவர் வணங்கினர் என்னும் கருத்தும் நமக்குத் தெரிவிக்கப்படுகிறது.

"மூன்றாகிய உறுதிப் பொருட்டு அவற்றான் மூவராகிய முதற்கடவுளோடு இயைபு உண்டாகலான், அம்மூன்று பொருள்களையுங் கூறலுற்றார்க்கு அம்மூவரையும் வாழ்த்துதல் முறைமையாதலின் இவ்வாழ்த்து அம் மூவர்க்கும் பொதுப்படக் கூறினாரென உணர்க.''

—பரிமேலழகர் — பாயிரம் — கடவுள் வாழ்த்து

ஆகவே, முழுமுதற் கடவுளை மூவராக வாழ்த்தும் முறை உரியதே என்பதும், அது வள்ளுவத்தில்

உண்டு என்பதும் பரிமேலழகர் கூற்றால் நமக்கு எவ்வித ஐயத்திற்கும் இடமின்றிப் புலனாகிறது.

கடவுள் மூவராக விளங்குகிறார் என்பது பரிமேலழகர் கூற்றால் நமக்குத் தெரிவிக்கப்பட்ட போதிலும், 'இல்வாழ்க்கை' அதிகாரத்தில் வள்ளுவர் கூறும் 'இயல்புடைய மூவர்' கடவுள் நிலைக்கு மட்டுமே உரியவர்களாகக் காணப்பட்ட போதிலும், இன்னமும் நமக்கு ஐயம் நீங்கிய பாடாய் இல்லை. காரணம், "வள்ளுவர் பரிமேலழகர் கூற்றின்படி 'மூவராகிய முதற் கடவுளையே' வணங்கி இருந்தால், அதைத் தெளிவாக வெளிக்காட்டி யிருக்கலாமே; 'இயல்புடைய மூவர்' என்னும் தொடரை மட்டும் கொண்டு வள்ளுவர் 'மூவராகிய முதற் கடவுளை வணங்கினார் என்பது பொருந்துமா?" என்னும் கேள்வி தோன்றுகின்றது. இக்கேள்விக்கு விடை காண, முன்னர் நாம் கண்ட இரண்டாம் கேள்விக்குரிய விடையை நோக்குவோம்.

இயல்புடைய மூவர் கடவுட் பண்பாளர்தாமா? என்னும் கேள்விக்கு ஆம் என்றே பதில் கொடுக்க வேண்டியவர்களாகிறோம்.

இவர்களைப் பாயிர அதிகாரங்கள் கூறுகின்றனவா?

என்னும் இரண்டாம் கேள்விக்கு நாம் கொடுக்கும் விடை யாது?

## 18. பாலம்

இவர்களைப் பாயிர அதிகாரங்கள் கூறுகின்றன என்பது துறவோர், ஒழுக்கத்து நீத்தார், அந்தணர்

என்போரே இயல்புடைய மூவர் எனக் கூறும் ஆசிரியரின் கூற்று.

"ஒழுக்கத்து நீத்தார், பொருட்பாற் பாயிர அதிகார மாகிய ஒழுக்கத்து நீத்தார் அதிகாரத்தில் விளக்கப்பட்ட னர்............அந்தணர் அந்தண்மைப் பண்பே இன்பத்துப் பால் பாயிர அதிகாரமான வான்சிறப்பில் மழை முகிலா கச் சுட்டப்பட்டது."

இக்கூற்றில் ஆசிரியர் பாயிரத்தின் நான்கு அதிகாரங்களுள் இடை நிற்கும் வான்சிறப்பு, நீத்தார் பெருமை ஆகிய இரண்டு அதிகாரங்களை மட்டுமே சுட்டுகின்றார். கடவுள் வாழ்த்தும், அறன் வலியுறுத்தலும் விடப்பட்டுள்ளன. அவ்விரண்டை யும் விட்டு விட்டதற்கான காரணமும், இடைநின்ற இரண்டு அதிகாரங்கள் மட்டுமே எடுத்துக்கொள்ளப் பட்டமைக்கான காரணமும் தெரிவிக்கப்படவில்லை.

அடுத்து இவ்வுரை சுட்டும் 'மூவர்', நீத்தார் பெருமை' அதிகாரத்திலிருந்து மட்டுமே குறிப்பிடப் படுகின்றனர்

| | | |
|---|---|---|
| ஒழுக்கத்து நீத்தார் | = | 21. |
| துறவோர் | = | 22. |
| அந்தணர் | = | 30. |

'அந்தணர்' என்பது கடவுளைக் குறிப்பிடும் பெயராகக் கடவுள் வாழ்த்தில் இருந்த போதிலும் (8) ஆசிரியர் கடவுள் வாழ்த்தை எடுத்துக்காட்டவில்லை. ஆனால், மூவரையும் கடவுட் பண்பாளர் என ஆசிரியர் சுட்டு வது கடவுள் வாழ்த்துடனும் பொருந்துகிறது எனக்

கொள்ளலாம். ஆனுல், ஆசிரியர் விளக்கத்தில் இவ்வாறு பொருத்திக் காட்டப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

எனவே, இவ்வுரை ஒருபுடை ஒத்தும், மறுபுடை ஒவ்வாதும் காணப்படுவதாகத் தெரிகிறது.

ஆகவே, இயல்புடைய மூவரை, மூவராகிய முதற்கடவுளாகக் கூறும் பாயிர அதிகாரங்கள் கூறுகின்றன எனக்கொண்டாலும்கூட, அவர்கள் ஒழுக்கத்து நீத்தார், துறவோர், அந்தணர் என்பவர்கள் தாமா? என்பது நோக்கத்தக்கது. ஒழுக்கத்து நீத்தார், துறவோர், அந்தணர் என்பவர்களுள், ஒழுக்கத்து நீத்தாருக்கும் துறவோருக்குமுள்ள வேற்றுமை என்ன? பாயிர அதிகாரமாகிய நீத்தார் பெருமையில் கூறப்படும் 'துறந்தார்க்கும்', துறவறவியலில் கூறப்படும் துறவிக்கும் வேற்றுமையுண்டா? துறவறவியலில் கூறப்படும் மனிதத்துறவியே துறவோரானுல், பாயிரத்தில் துறவோரைப் பெருமைப் படுத்தக் காரணம் என்ன? இக்கேள்விகள் எழுகின்றன. இவற்றிற்கு ஆசிரியர் கூறும் விளக்கம் :

"துறவோர் அறவாழ்வின் ஆட்சியாளராக அறத்துப் பாலிலேயே சிறப்பறவியல் முழுவதும் குறிக்கப்படுபவராவர்" என்பதாகும்.

இதன் மூலம் பாயிர அதிகாரத்துக்கும், துறவோர்க்குமுள்ள தொடர்பு துண்டிக்கப்படுகிறது. துறவோர், துறவியலில் கூறும் மனிதனே எனக் கூறப்படுவதால், கடவுட்பண்பாளர் என்னும் நிலையிலிருந்தும் துறவோர் கீழிறக்கப்பபடுகிருர்.

இயல்புடைய மூவருள் துறவியாகிய மனிதன் இணைக்கப்படுவது பொருத்தமற்றது என்பதை வள்ளுவரும் சுட்டும் முகத்தான்,

"துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை.'

என்பதனுள் முதலில் துறந்தாரைச் சேர்த்துள்ளார். ஆகவே, இரண்டாம் குறட்பா சுட்டும் துறந்தார் முதற் குறட்பா சுட்டும் இயல்புடையமூவரில் எங்ஙனம் இடம் பெற முடியும்? ஆனால், இவ்வுரை புதிய முடிவுகளுக்கு நம்மை அழைத்துச் செல்லும் சிறப்புடையது என்பதில் ஐயம் இல்லை. காரணம் இவ்வுரை காட்டும் புதிய படிகள் :—

1 இயல்புடைய மூவர் கடவுட்பண்பாளர்.

2 இம்மூவராகிய கடவுள்பண்பாளரைப் பாயிர அதிகாரங்கள் கூறுகின்றன.

இவ்வாசிரியர் காட்டும் படிகளுடன் இணையும் வகையில் எதிர்த்திசையிலிருந்து படிகளை அமைத்துள்ளார் பரிமேலழகர். பரிமேலழகர் காட்டியுள்ளபடிகள் :—

1 பாயிர அதிகாரமாகிய கடவுள் வாழ்த்தில் மூவராகிய முதற்கடவுளையே வள்ளுவர் வணங்குகிறார்.

மூன்றாகிய உறுதிப் பொருட்டு அவற்றான் மூவராகிய முதற்கடவுளோடு இணைப்பு உண்டாகலாம். அம்மூன்று பொருட்களையும் கூறலுற்றார்க்கு அம்மூவரையும் வாழ்த்து

தல் முறைமையாகலின் இவ்வாழ்த்து அம்மூவருக்கும் பொதுப்படக் கூறினரென உணர்க.''

இவ்வாறு இருவரும் இருவேறு திசைகளிலிருந்து எழுப்பிவரும் படிகளை நாம் இணைத்துப் பார்த்தால் அவ்விணைப்பு புதிய ஒரு பாலமாக அமைகின்றது. இயல்புடைய மூவர் யார்? எனக் காண முடியாமல் ஐயமர்கிய ஆற்றில் அலைப்புண்டு திகைக்கும் நமக்கு, அக்காட்டாறறைக் கடக்க உதவும் எழில் மிகு பால மாக அவை இலங்குகின்றன.

பாலம் நமக்குக் காட்டும் குறிப்புகள்

**பரிமேலழகர்** 1. வள்ளுவர் மூவராகிய முதற்கடவுளைப் பாயிரத்தில் வாழ்த்துகிறார்.

**இக்கால உரையாசிரியர்** --2 இயல்புடைய மூவராகிய கடவுள் பண்பாளரைப் பாயிரம் கூறுகிறது.

ஆகவே, இயல்புடைய மூவரைப் பாயிரத்தில் காணலாம் என்பது மட்டும் இவற்றின் மூலம் உறுதிப் படுகிறது.

பாலம் சிறப்புற அமைய இரண்டு பக்கங்களிலுமுள்ள கரடுமுரடுகளை நீக்கிச் சமப்படுத்தி இணைப்பைச் செம்மையுற அமைக்க வேண்டுவது மட்டுமே நமது கடமையாக உள்ளது,

வள்ளுவர் மூவராகிய முதற்கடவுளைப் பாயிரத்தில் முதல் அதிகாரமாகிய கடவுள் வாழ்த்தில் வாழ்த்தியுள்ளார் எனக்கூறும் பரிமேலழகர் எவ்

வாறு அது பொருந்தும் என்பதற்கான விளக்கத்தைக் கொடுக்கவில்லை.

## 19 ஒருவரா? மூவரா?

''மூவராகிய முதற் கடவுளை(பரி) அதாவது மூன்று தனி இயல்புடைய முதற்கடவுளைத்தான் இயல் புடைய மூவராகத் திருவள்ளுவர் தம் நூலுள் கூறி யுள்ளாரா? கூறியுள்ளார் என்பது பொருந்துமா?'' என்பன நோக்கத்தக்கவை

மேலே கண்ட, ''மூவராகிய முதற் கடவுள், அதாவது மூன்று தனி இயல்புடைய முதற்கடவுள்'' என்னும் தொடர் நம்மைச் சற்று மயக்கத்தில் ஆழ்த் துவதாகத் தெரிகிறது. கடவுள் ஒருவரா? மூவரா? என்பதே அம்மயக்கம். கடவுள் ஒருவரே என்பதும், அவரே மூவர் என்பதும், 'இயல்புடைய மூவர்(திரு)' மூவராகிய முதற்கடவுள் (பரி) என்னும் தொடர்கள் குறிப்பதாகத் தெரிவிக்கின்றன.

இவ்விளக்கத்தை வள்ளுவரே தம் நூலில் தெளி வாகக் கூறியுள்ளாரா? என்பது கேள்வி. பாயிரத்தை நன்கு ஆய்பவர்கள், 'ஆம்' என்றே பதில் கொடுக்க இயலும். எவ்வாறு?

பாயிரத்தின் முதல் மூன்று அதிகாரங்கள் ஏன்? ஐந்தவித்தான்' என்னும் சொல்லால் கடவுளையும், நீத்தாரையும் இணைப்பது ஏன்? கடவுளுக்கும், நீத் தாருக்கும் இடையே வான் சிறப்பு ஏன்? இவ்வினாக் களுக்கு விடையாக வள்ளுவர் கொடுக்கும் விளக்கம் (1) பொய்தீர் ஒழுக்க நெறியைக் காட்டியவன் ஐந்த

வித்தானாகிய 'கடவுள் எனவும், (2) அவ்வொழுக்கத்தின் பொருட்டு நீத்தவனே ஒழுக்கத்து "நீத்தார்" எனவும், (3) யார் யார்க்கும் ஒழுக்கம் நிலைநிற்கக் காரணமாய் இருப்பது 'வான்' எனவும், முதல் மூன்று அதிகாரங்களையும் 'ஒழுக்கம்' என்னும் சொல்லால் ஒன்றாக்கிக் காட்டுகிறார் வள்ளுவர். ஆகவே, ஒழுக்கம் என்னும் சொல்லால் கடவுள், வான், நீத்தார் ஆகிய மூவரும் ஒன்றாக்கப் பட்டுள்ளனர். ஒழுக்கம் என்னும் சொல்லால் ஒன்றாக்கப்பட்டுள்ள அம்மூவரும் அதிகாரத்தலைப்புகளால் தனித்தனியாகக் கடவுள், வான், நீத்தார் ஆகிய மூவராக விளங்குகின்றனர்.

'ஒழுக்கம்' என்னும் சொல்லால் ஒருவராகவும், மூன்று வேறுபட்ட அதிகாரங்களால் மூவராகவும் கடவுளைக் காட்டுகிறார் வள்ளுவர். ஆகவே, பாயிரத்தின் முதல் மூன்று அதிகாரங்களுமே, மூன்றில் ஒன்றாகவும், ஒன்றில் மூன்றாகவும் விளங்குகின்றன.

இந்த அடிப்படையை நாம் உணராவிடில் அல்லது ஏற்றுக் கொள்ளாவிடில் நாம் முன்பு கண்ட, ஐந்தவித்தான், வான், நீத்தார் ஆகிய மூன்று சொற்களுக்கும் நமக்குப் பொருள் விளங்காததோடு பாயிரத்தில் முதல் மூன்று அதிகாரங்களும் ஏன் என்னும் வினாவுக்கும் நம்மால் சரியான விடை கொடுக்க இயலாத நிலை ஏற்படுகிறது. இந்த அடிப்படையை நாம் ஏற்றுக் கொண்டால் இந்நூலின் தொடக்கத்தில் எழுந்த

1 ஐந்தவித்தான் யார் ?

2 வான் எது ?

3 நீத்தார் யார் ?

4 பாயிரத்திஞல் பாராட்டப்படும் மூவர் யாவர் ?

என்னும் சிக்கல்களுக்கு விடையை இப்பொழுது நாம் கொடுக்கக் கூடியவர்களாக இருப்பதுடன் 'இயல் புடைய மூவர் யாவர் ?' என்னும் சிக்கலும் நமக்கு நீக்கப்படுகிறதெனலாம். இதன் விளக்கத்தைக் காரண காரியங்களுடன் காண விரும்பும் அன்பர்கள் நம் முன்னேய நூல்களுள்,

1 ஐந்தவித்தான் யார் ?

2 வான் எது ?

3 நீத்தார் யார் ?

ஆகிய மூன்றினேயும் நோக்குவார்களாக. திருக்குறள் ஆய்வின் தொடர்பாக வெளிவந்துள்ள நம் மற்றைய நூல்களேயும் ஆழ்ந்து, ஆய்ந்து நோக்கும் அன்பர் களே இதன்தொடர்பான மற்ற ஐயங்களும் அணுகா தென்றே முற்றும் நம்புகிறேன். பாயிரத்தின் முதல் மூன்று அதிகாரங்களும் ஒன்றில் மூன்ருகவும் மூன் றில் ஒன்ருகவும் விளங்குவதைக் கண்டோம். ஆகவே, திருவள்ளுவர் பாயிரத்தின் முதல் மூன்று அதிகாரங் களிலும் வகையாகச் சொன்ன கருத்துகளேயே பாயி ரத்தை முடித்து, நூலேத் தொடங்குங்கால் தொகுத்து 'இயல்புடைய மூவர்' என்று தொகை யாகக் கூறுகிருர். ஆகவே, இயல்புடைய மூவர் என்று வள்ளுவர் கொடுக்கும் தொகைக்கு விளக் கத்தை நாம் வேறெங்கும் தேடி அல்லல் பட வேண்

டிய நிலை இல்லை. தொகைக்கு முன்னருள்ள பாயிரத்திலேயே கடவுள், வான், நீத்தார் என்னும் வகையுள்ளது இம்மூன்றும் ஒரே கடவுளுடன் இணைந்தவைதாமா ? அறிஞர்களின் கருத்துகளை நோக்குவோம்.

(1) 'ஐந்தவித்தான் யார் ? என்னும் வினாவிற்குக் கிடைக்கப் பெற்ற விடை 'இறைவனே' யாகும். அவ்வைந்தவித்தான் கௌதமனையோ, இந்திரனையோ ஒருகாலும் சுட்டாது. இறைவன் ஒருவனே ஐந்தவித்தான் ஆவான்.'

—பேராசிரியர் ப. தமிழ்ச் செல்வி. M.A.

(3. 5. 72 திருக்குறள் ஆய்வு மாநாட்டுக் கட்டுரை )

(2) "ஆகவே திருவள்ளுவர் குறிப்பிடும் 'வான்' எது ? என்பது "இறைவனது அருளாற்றலையே" குறிப்பிடுகின்றது என்பது என்துணிவு உங்களது துணிவும் அதுவாகவே இருத்தல் கூடும் என்றும் நம்புகிறேன்."

—டாக்டர். N. சுப்புரெட்டியார். M.A.Ph.D.

(3. 5. 72. திருக்குறள் ஆய்வு மாநாட்டுக் கட்டுரை)

"இறைவனது அருளாற்றலையே கிறித்தவர்கள் 'பரிசுத்த ஆவி' எனக் குறிப்பிடுகின்றனர்."

-அருள்திரு.டாக்டர். ஞானப்பிரகாசம் அடிகள், M.A.,Ph.D.

(3. 5. 72 திருக்குறள் ஆய்வு மாநாட்டுரை)

நீத்தார் இல்லறத்தாரோ துறவறத்தாரோ அல்லர் என்பதும் கண்டோம். கடவுள்—எல்லாம் கடந்து நின்ற ஒருவர். நீத்தார்—எதையோ நீத்தவர். ஆனல், கடவுள்வேறு, நீத்தார் வேறு. 1. கடவுள்நிலை, 2. கடவுளே அதைப் பிரிந்த நிலை—கடவுள் தன்நிலையை நீத்துவந்து 'நீத்தார்' ஆகிறார் என்பது ஆணித்தரமான முடிவு.

முடிப்புரை :— இதுவரை கண்டவற்றால், நீத்தார் என்பதன் பொதுப் பொருள் — துறவு அன்று—தன் நிலை நீத்து வந்த கடவுளின் அவதாரமே என்று உறுதி செய்யலாம்.
—பேராசிரியர். சரசுவதி இராமநாதன். M A. (3. 5. 72 ஆய்வு மாநாட்டுக் கட்டுரை)

## 20. துணை

இல்வாழ்வான் என்பான் கடவுள், வான், நீத்தார் ஆகிய இயல்புடைய மூவர்க்கும் நல்லாற்றின் நின்ற துணை என்றுகிறது.

இது எவ்வாறு பொருந்தும்? கடவுள், வான், நீத்தார் ஆகிய மூவர்க்கும் இல்வாழ்வான் எவ்வாறு துணையாக விளங்க இயலும்? இல்வாழ்வான் துணை கடவுளுக்கு ஏன்? கடவுள் துணை இல்வாழ்வானுக்கு வேண்டுமேயல்லாது, இல்வாழ்வான் துணை கடவுளுக்கு வேண்டும் என்பது எவ்வாறு பொருந்தும்? இவ்வினுக்கள் இங்கே எழுகின்றன.

இவ்வினுக்களுக்கும் விடை காணத் துணை என்னும் சொல்லின் பொருளை நாம் ஆய்தல் வேண்டும். 'துணை' என்னும் இச்சொல்லை வள்ளுவர் ஏறத்தாழ இருபது இடங்களில் ஆண்டுள்ளார். இவ்விடங்களில் 'அளவு' என்னும் பொருளிலும், 'ஒன்றுக்கொன்று துணை' என்னும் பொருளிலும், 'தனக்குத் துணையாகத் தன்னால் செய்யப்பட்டது' அல்லது படைக்கப்பட்டது என்னும் பொருளிலும் ஆளுகிறார். இம்மூன்று பொருட்களிலும் அதிக வேற்றுமை இல்லை. 'ஒன்றுக்கொன்று துணை' என்னும்

பொருளும் 'தனக்குத் துணையாகத் தன்னால் செய்யப்பட்டது' என்னும் பொருளும் மேலெழுந்தவாரியாக வேறுபட்டவையாகத் தோன்றினும், ஆழ்ந்து பார்க்குங்கால் வேற்றுமையுடையதன்று.

தனக்குத் துணையாக = துணையை விரும்பிய ஒன்று.

தன்னால் செய்யப்பட்டது = இன்னொரு துணையைப் படைத்தது.

படைக்கும் ஆற்றலையுடைய ஒன்று, அவ்வாற்றல் அற்ற பிறிதொன்றைத் தனக்குத் துணையாக இருக்கும்படியாகவே படைத்தது. ஆகவே, படைத்ததும், படைக்கப்பட்டதும் ஒன்றுக்கொன்று துணையேயன்றோ?

இதை ஓர் எடுத்துக்காட்டில் விளக்கலாம். சிற்பி ஒருவன், தன் சிற்ப வேலைக்குத் துணையாக உளி ஒன்றை இரும்பிலிருந்து படைத்தான். உளி சிற்பியினால் படைக்கப்பட்டாலும், உளியின் உதவி கொண்டே சிற்பத்தைச் செதுக்குகிறான்; சிற்பத்தைப் படைக்கிறான். உளி சிற்பியினால் படைக்கப்பட்ட ஒன்றானாலும், உளியின் துணைகொண்டே சிற்பம் உருவாக்கப்படுகிறது. ஆகவே, உளி சிற்பிக்குத் துணை; சிற்பி உளிக்குத் துணை. சிற்பியின்றி உளி இல்லை; உளியின்றிச் சிற்பம் இல்லை.

ஆகவே 'ஒன்றுக்கொன்று துணை' என்னும் பொருளும், 'தனக்குத் துணையாகத் தன்னால் செய்யப்பட்டது' என்னும் பொருளும் ஒருங்கிணைந்தவையே. இப்போது குறட்பாக்களை நோக்குவோம்.

36. "அன்றறிவாம் என்னாது அறம் செய்க மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை."

51. "மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற்
கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை."

132. "பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்தோம்பித்
தேரினும் அஃதே துணை."

அறத்தைச் செய்க—அது பொன்றாத் துணை.
மாண்புடையவளைக்கொள்க-அவள்வாழ்க்கைத்
துணை.

ஒழுக்கத்தைக் காக்க—அஃதே துணை.

செய்யப்பட்ட அறமும், கொள்ளப்பட்ட மனைவியும், காக்கப்பட்ட ஒழுக்கமும் அவற்றையுடையவர்களுக்குத் துணையாக விளங்குகின்றன. துணையாக விளங்கும் இவை அவற்றை யுடையவர்களினும் சிறப்புடையவை என்றோ, உயர்வுடையவை என்றோ பொருளல்ல. அவ்வாறே படைக்கப்பட்டவை படைத்தவனுக்குத் துணையாக விளங்குவது இயல்பே இந்நிலையில் இல்வாழ்வானாகிய மனிதன் தன்னைப் படைத்த கடவுளாகிய 'இயல்புடைய மூவர்க்கும்' அம்மூவர் காட்டிய நல்லாற்றின்படி நின்ற துணை என்பதும் பொருந்தக் கூடியதே. உளியின் துணை சிற்பிக்குத் தேவையாய் இருப்பதைப்போன்று இல்வாழ்வான் துணையும் கடவுளுக்குத் தேவை எனக் கூறுகிறார் வள்ளுவர்.

இல்வாழ்வான் இன்றிக் கடவுள் உலகை இயக்க இயலாதா? இயலும். எவ்வாறு? இன்று நாம் காணும் உலக மக்கள் அத்தனை பேரும் இல்வாழ்க்கையின் பயனாய்த் தோன்றியவர்களே. இம் மக்கள் யாவரும் தோன்றுவதற்குக் காரணமான ஆதி முதல் இல்வாழ்க்கையின் முதல் ஆணாகிய இல்வாழ்வான்

எவ்வாறு தோன்றினன்? தோன்றியிருப்பான்? முதல் மனிதனும் முதல் இல்வாழ்வான் தானாகவே உண்டாகியிருக்க இயலுமா? தானாகவே முதல் மனிதன் உண்டாயிருக்க இயலுமானால், இப்பொழுதும் அது நடைபெறவேண்டுமன்றோ? இப்பொழுது அது நடைபெற இயலாத காரணத்தால், கடவுள் நம்பிக்கையுடையவர்கள், ஆதிமுதல் இல்வாழ்க்கைத் தலைவனாகிய உலகின் முதல் இல்வாழ்வான், கடவுளால் நேரடியாகப் படைக்கப்பட்டிருக்க வேண்டும் என நம்புகிறார்கள் அவன் வாழ்க்கைக்குத் துணையாக இருக்கும்படியாக அவனுக்குப் பின்னர்க் கொடுக்கப் பட்டவளே அவனது 'வாழ்க்கைத்துணை' யாம் பெண் என்பது 'வாழ்க்கைத் துணை' என வள்ளுவர் கொடுக்கும் பெயராலேயே விளங்குகிறது.

ஆகவே, ஆதிமுதல் இல்வாழ்க்கையும், அதன் தலைவனும், ஆதிமுதல் இல்வாழ்வானும், அவன் வாழ்க்கைத் துணைவியும் பெற்றோர்களிடம் பிறந்தவர்களாய் இருக்க இயலாது; தாங்களாய்த் தோன்றியிருக்கவும் இயலாது. அவர்கள் கடவுளால் படைக்கப்பட்டவர்களாய்த்தான் இருக்க இயலும் எனக் கடவுள் கொள்கையுடைய சமயங்கள் நம்புகின்றன. (பிறவிச் சுழற்சிக் கொள்கைக்கும் கடவுள் கொள்கைக்கும் தொடர்பில்லை என்பதையும், வள்ளுவர்க்குப் பிறவிச் சுழற்சிக் கொள்கை சிறிதும் உடன்பாடன்று என்பதையும் நமது முந்தைய நூல்களுள் "எழுபிறப்பு" விளக்குகிறது.)

ஆகவே, உலகின் முதல் இல்வாழ்வானையும், வாழ்க்கைத் துணைவியையும் படைத்தவன் இறைவனாகத்தான் இருக்க இயலும். ஆதி ஆண் பெண்ணும் ஆதிப் பெற்றோரைப் படைத்தவன, இப்போதும் மனிதரைப் படைக்கும் திறன் உள்ள

வனே. ஆயினும் தனக்குவமையில்லாதவனாகிய கடவுள் தனக்குத்தானே ஒரு நியதியை வைத்துக் கொண்டு செயல்படுகிறான் எனலாம். என்ன நியதி? தான் படைத்த மனிதராம் ஆதிப் பெற்றோரின் வழி யாகவே உலகைப் படைக்கும் தனது தொழிலைச் செய்து வருகிறான் என்பது அந்நியதி. ஆகவே, கடவுளின் உலகைப் படைக்கும் தொழிலுக்கு ஆதிப் பெற்றோர் முதல், இல்வாழ்வார் யாவரும் நல்லாற் றின் நின்ற துணையாக இருந்து செயல்பட்டு வரு கின்றனர்.

இதை ஓர் எடுத்துக்காட்டின் வாயிலாக விளக்க லாம். அரசன் நாட்டை ஆளுகிறான். முழு அதிகார மும் அவனுடையதே. அவன் நாட்டில் அவனுக்கு மேலான அதிகாரம் இல்லை. நாட்டின் எல்லாச் செயல்களும் அவனுக்கு உட்பட்டே நடந்துவந்த போதிலும், எல்லாவற்றையும் அவன் ஒருவனே செய்து வருகிறானா? இல்லை. அவன் தனக்குத் துணை யாக இருக்கும்படி அரசாங்க அலுவலர்களாகச் சிலரை நியமித்துக்கொண்டு அதிகாரத்தின் ஒரு பகுதியை அவர்களுக்கு அளிக்கிறான்; அவர்களின் துணைகொண்டு நாட்டை ஆளுகிறான். ஆகவே, அவ் வரசாங்க அலுவலர்கள் அரசனுக்கு நல்லாற்றின் நின்ற துணையாவார்கள்.

## 21. நல்லாற்றின் நின்ற துணை

அந்நாட்டிலுள்ளது ஒரு சிறிய ஊர். அங்குள்ள மக்கள் அந்நாட்டு அரசனைக் கண்ணால் காணவே யில்லை; ஆயினும், அரசனது அலுவலனைக் காணு கின்றனர். அவனால் அவ்வூர் ஆட்சி நன்முறையில்

நடைபெறுகிறது. அரசனுடைய அலுவலஞகிய அவ்வூர் அதிகாரி, அவ்வரசனுக்கு நல்லாற்றினின்ற துணையாக இருக்கிருன் "நல்லாறு" என்பது என்ன? அரசன் அக்குடி மக்களின் நலன் கருதி வகுத்துள்ள நல்ல வழி என்பதுதானே பொருள். "நல்லாற்றில்" அவ்வலுவலகன் நடவாவிடில் ஊர் மக்கள் துன்பமடைவதுடன், அவ்வலுவலனும் துன்பத்திற்குள்ளாவான் என்பதில் ஐயமில்லை இதை "நல்லாற்றினின்ற துணை" என்னும் தொடரே நன்கு விளக்குகிறது நல்லாற்றில் நிற்காதவன் துணையாக இருக்க இயலாது இவ்வுவமையின் கருத்தைப் போன்றதே வள்ளுவரின் குறள் கருத்துமாகுமெனலாம்.

ஊர் அதிகாரி என்பான் அந்நாட்டு அரசனுக்கு நல்லாற்றின் நின்ற துணை அவ்வாறே இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும் நல்லாற்றின் நின்ற துணை.

இல்வாழ்வான் என்பான் நல்லாற்றின்கண் நிலை நிற்கவில்லையாயின் முதலில் பாதிக்கப்படுவது அவனது "இல்வாழ்வான்" என்னும் நிலையே யன்ருே? ஓர் ஆணுக்கு "இல்வாழ்வான" என்னும் பெயர் நிலைத்து நிற்கவேண்டுமாஞல் அவன் நல்லாற்றில் நிற்க வேண்டும். "நல்லாற்றில்" நிற்காதவன் இல்வாழ்வானுமல்லன்; அவனுக்குத் துணையாக வருபவள் 'வாழ்க்கைத்துணை"யுமல்லள். ஆகவே "வாழ்க்கைத் துணை" "இல்வாழ்வான்" என்னும் பெயர்கள் பெண்ணுக்கும் ஆணுக்கும் ஏற்பட வேண்டுமாஞல் அங்கு "நல்லாறு" இருக்க வேண்டும். **இறைவன் உலகை இயக்குவதும் அந்த நல்லாற்றின் துணை கொண்டேயல்லாது, வெறும் பெண்ணையோ ஆணையோ கொண்டன்று.** பாயிரத்

தில், இயல்புடை மூவரை முதல் மூன்று அதிகாரங்களிலும், அம்மூவரால் காட்டப்படும், நிலை நிறுத்தப்படும அறத்தாற்றினை நான்காவது அதிகாரத்திலும் கூறிய வள்ளுவர், இயல்புடைய மூவர்க்கும் அறத்தாருகிய நல்லாற்றின் நின்ற துணையாகிய இல்வாழ்க்கையையும் இல்வாழ்வானையும் ஐந்தாம் அதிகாரத்தில் கூறுகிறார். ஆகவே, கடவுளின் 'நல்லாறு" உலகில் நடைபெறுவதற்குத் துணையாய் இருப்பவன் "இல்வாழ்வான்" ஆவான்.

## 22. இல்வாழ்வான்

வள்ளுவப் பெருந்தகை வீட்டுப் பகுதி எனப்படும் பாயிரத்தைப் பாடிய பின்னர் நூலைப் பாடத் தொடங்கி ஆளும் முதல் தொடரே "இல்வாழ்வான்" என்பதாகும். வீட்டுப் பகுதி எனப்படும் பாயிரத்திற்கும் "இல்வாழ்வான்" என்பதிலுள்ள இல்லுக்கும் மிகுந்த தொடர்பு உள்ளது. 'வீடு' என்பதற்கும் 'இல்' என்பதற்கும் வேற்றுமை இல்லை. திருக்குறள் பாயிரம் **'வீட்டுப் பகுதி'** என்று பெயர் பெறுமா?

"பாயிரமே திருக்குறளேடு நுதலிய பொருளனைத்தையும் ஒரே முழு மொத்தமாகத் தொகுத்துக் கூறும் முப்பாலெட்டின் ஒரு சிறு மணிப்பதிப்பாகவும், **நாலாவது பாலாகிய வீட்டுப்பால் கூறும் பகுதியாகவும்,** ஏட்டின் அழகுக் கவர்ச்சி மிக்க முன்னுரை முகப்புரை அடங்கிய நூன்முகமாகவும் திகழ்கின்றது."

— மணி விளக்கவுரை I பக். 146

திருவள்ளுவ மாலையிலும் பாயிரம் வீட்டுப்பகுதி என்னும் குறிப்புக் காணப்படுகிறது.

## நச்செள்ளை உத்தலையார்

இன்பப் பொருள் அறம் வீடு என்னும் இந்நான்கும்
முன்பு அறியச் சொன்ன முதுமொழி நூல்— மன்பதை
கட்கு
உள்ள அரிதென்று அவை வள்ளுவர் உலகங்
கொள்ள மொழிந்தார் குறள் —திருவள்ளுவமாலை—33.

## சிறு மேதாவியார்

வீடொன்று பாயிரம் நான்கு; விளங்கு அறம்
நாடிய முப்பத்து மூன்று; ஒன்று ஊழ்;—கூடு பொருள்
எள்ளில் எழுபது; இருபதிற்றைந்து இன்பம்;
வள்ளுவர் சொன்ன வகை. —திருவள்ளுவமாலை—20.

ஆகவே, பாயிரம் வீட்டுப் பகுதி எனப் பெயர் பெறுவதும் உண்டு என்பது தெரிகிறது. வீடு கூறும் பகுதி பாயிரம் என்னும் பெயரில் அடங்கிவிடுவதாலும் மற்ற அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றுமே விரிவாக நூலினுள் முப்பால்களாகக் கூறப்படுகின்றமையாலும் திருக்குறள் 'முப்பால்' எனப் பெயர் பெற்றது. எனினும், அது நாற்பாலை, யும் உடையது என்பதைக் காட்டுகிறார். கீரந்தையார்.

தப்பா முதற் பாவால் தாம் மாண்ட பாடலினால்
முப்பாலின் நாற்பால் மொழிந்தவர்—எப்பாலும்
வைவைத்த கூர்வேல் வழுதி மனம்மகிழத்
தெய்வத் திருவள்ளுவர் —திருவள்ளுவமாலை—19.

வாழும் இடம் வீடு. நீடுவாழ்வுக்குரிய இடமும் வீடுதானே. அதைப் பேரின்ப வீடு எனக்கூறலாம்.

"நிலமிசை **நீடுவாழ்வார்**" —3

"நெறி நின்றார் **நீடுவாழ்வார்**" —6

மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தாரும், பொறி

வாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க நெறி நின்றாரும் இந்நீடு வாழ்வைப் பெற்று அப்பேரின்ப வீட்டில் வாழுவர் என வள்ளுவர் குறிப்பிடுகிறார். அதுமட்டுமன்று; இல்வாழ்வான் இவ்வையத்தில் வாழ்வாங்கு வாழ்ந்திடின் அவன் வானுறையும் தெய்வத்துள், அப்பேரின்ப வீட்டில் வைக்கப்படுவான் எனவும் வள்ளுவர் கூறுகிறார்.

> "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
> தெய்வத்துள் வைக்கப்படும்."

ஆகவே, 'வீடு' என்பது பாயிரத்திற்கும், இல்வாழ்க்கைக்கும் பொதுவானதாகவே உள்ளது. 'இல்வாழ்வான்' என்பதிலுள்ள 'இல்' என்பது செங்கல்லாலும், மரத்தாலும் ஆகிய கைவேலைப்பாடான வீட்டையா குறிக்கின்றது? ஆழ்ந்து நோக்குங்கால் இங்கு கட்டப்படும் 'இல்' கைவேலையினால் ஆன வீட்டையன்று என்பது விளங்கும். பின் எது?

இயல்புடைய மூவர்க்கும் துணையாய் நின்ற நல்லாற்றினை மேற்கொண்டு வாழ்பவனையே 'இல்வாழ்வான்' என்னும் தொடர் குறிக்கிறது.

**இல்** = இயல்புடைய மூவர்க்கும் துணையாய் நின்ற நல்லாறு ஆகும்.

இதன் முடிவு என்ன? — வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படுதல்,
நீடு வாழ்வு பெறுதல்.

ஆகவே, நூலின் முதல் தொடரான 'இல்வாழ்வான்' என்பதனுள் வள்ளுவர் மிகவிரிந்த பொருளை அடக்கியுள்ளார். அது பேரின்ப வீட்டின் சாயலையுடைய

இன்ப வீடு என்பதும், அதில் வாழ்பவன் இயல் புடைய மூவர்க்கும் நல்லாற்றின் நின்ற துணையான வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் என்பதும், அவ னடையப்போவது "நீடு வாழ்வு" என்பதும் நமக்கு விளக்கப்படுகின்றன.

"இல்" பொதுவாகப் பெண்ணுக்குரியதாகக் கூறப்படினும் இங்கு வள்ளுவர் அதை ஆணுடன் சேர்ப்பது சிந்திக்கத்தக்கது.

**இல்லாள்** = வீட்டுக்குரியவள்

**இல்லான்** = அறிவு இல்லாதவன், அன்பில்லா தவன், பொருள் இல்லாதவன், எது வுமே இல்லாதவன்.

**இல்வாழ்வான்** = வாழ்க்கைத் துணையுடன் வாழ் வாங்கு நல்லாற்றில் இயல்புடைய மூவர்க்கும் துணையாக வாழுபவன்.

ஆகவே "இல்வாழ்வான்" என்பது ஒரு சிறந்த நிலை யாகும். "இல்வாழ்வான்" என்பதிலுள்ள "இல்" அவனைப் பேரின்ப வீட்டுடன் தொடர்புடைய வனைக் காட்டுகிறது, ஆகவே, இவ்வில்வாழ்க்கை இயல்புடைய மூவராகிய கடவுளால், அவருக்கு நல் லாற்றின் துணை நிற்கும்படியாகப் புனிதமாகப் படைக்கப்பட்டது. அது பேரின்ப வீட்டின் சாயலைக் கொண்டது.

அது ஒரு சிறந்த தகுதியையுடைய நிலை என் பதை நமக்குத் தெரிவிக்கும் சொல்லே "என்பான்" என்பதாகும்.

"என்பான்" இங்கே "எனப்படும் தகுதிக்குரியவன்" எனச் செயப்படு பொருளில் வழங்கிற்று."

—பரிமேலழகர் விளக்கவுரை II பக். 40.

மக்களாகப் பிறந்தவர்கள் யாவரும் ஆண் என்றோ பெண் என்றோ பெயர்பெறலாம். ஆனால், அவர்கள் யாவரும், இல்வாழ்வானாகவோ வாழ்க்கைத் துணையாகவோ வள்ளுவர் கொள்ளும் பொருளில் ஆகிவிடல் இயலாது. உண்மையான இல்வாழ்வானாகவோ, வாழ்க்கைத்துணையாகவோ மாறுவதே ஒரு சிறந்த நிலையாகும். அந்நிலையை அடைந்தவனே இயல்புடைய மூவர்க்கும் நல்லாற்றின் நின்ற துணையான வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும் தகுதி பெற்ற இல்வாழ்வான் ஆவான்,

"இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை."

"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்-வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்."

" 'இல்வாழ்வான் என்பான்' என்னும் தொடரில் உள்ள 'என்பான்' என்பது இல்வாழ்வானது சிறப்பைக் குறிக்கது. "அன்பினைந்திணைக் களவெனப்படுவது." (இறை. சூத். 1) என்பதன் உரையில் "களவென்றதற்குச் சிறப்புடைத்துஎன்ற வாறு. ஊரெனப்படுவது உறையூர் என்றவிடத்துப் பிறவும் ஊருண்மை சொல்லி, அவற்றுளெல்லாம் உறையூர் சிறப்புடைமை சொல்லுப"

கி. வா. ஜ. குறிப்புரை—திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு.

## 23 இல்வாழ்வான் துணை

இயல்புடைய மூவராகிய தோன்றுத்துணையின் தன்மையைக் கொண்டு விளங்கும் கடவுளுக்குத்

தோன்றும் துணையாய் இருப்பவனே இல்வாழ்வான். எவ்வாறு?

உலகம் என்பது உயர்ந்தோர்மேற்றே. உயர்ந்தோராகிய மனிதர் யாவரும் குழந்தையாய்ப் பிறந்து வளர்ந்தவரே. ஆகவே, உலகத்திற்குக் குழந்தை நிலை தொடக்கமாகிறது. அதற்கு முந்திய நிலைகள் யாவை?

குழந்தை ஒன்று பிறக்கிறது.

குழந்தையும், தாயும் இணைந்தே உலகத்திற்குக் காட்சி அளவில் தோற்றமளிக்கின்றனர். ஆகவே, பிறக்கும் எந்தக் குழந்தையைக் காணும் யாருமே அதன் தாய் இன்னார் எனத் திட்டமாகக் காட்சியளவில் அறிந்து கொள்ள முடியும் குழந்தையே அது தோன்றுவதற்குக் காரணமான தாயைக் காட்சியில் காட்டுகிறது. தாயைக் காட்சியில் காணும் நாம், தாயாகிய பெண் தாய்மையடைவதற்குக் காரணமான தந்தையைக் காட்சியளவில் காணுவது எவ்வாறு? தாயாகிய பெண் தன் உள்ளத்திலுள்ளதை வெளியே சொன்னால் அன்றி, பிள்ளையின் தந்தையை நாம் காண இயலாது. தாயாகிய பெண் அதைச் சொன்னாலும் கூட, அதைக் கேட்ட நாம், அதை நம்பி, அந்த நம்பிக்கையின் அடிப்படையிலேயே ஓர் ஆணைத் தந்தை எனக் கொள்ளுகிறோமே யன்றி தாயைக் காட்சி அளவில் அறிந்து கொள்வதைப் போன்று, **தந்தையைக் காட்சி அளவில் நாம் அறிந்து கொள்ள முடிவதில்லை தந்தையை நாம் அறிவது நம்பிக்கையி னளவிலேயே ஆகும்.** ஆனால், காட்சி அளவில் தந்தையை நாம் காண இயலா விட்டாலும், அதை நம்பிக்கையின் அடிப்

படையிலேயே அறிந்து கொள்ள வேண்டிய நிலை இருந்தாலும், தந்தையாகிய ஆண் இன்றிக் குழந்தை இல்லை என்பதை மட்டும் தெளிவாக அறிவோம்.

ஆகவே, ஆண் காட்சியளவுடையவனேயாயினும், இல்வாழ்வானாகிய தந்தை நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டவனே. ஆண்கள் யாவருமே தந்தையாகி விட முடியுமா? ஆம் என்று சொல்லி விட இயலாது. ஆகவே, அவனைத் தாண்டிய ஒன்றின் துணை அவனுக்கு வேண்டும். நம்பிக்கையின் அடிப்படையாய் விளங்கும் தந்தைக்கும் அடிப்படையா விளங்குவது வேறொன்று. அதுவே தோன்றாத் துணையாய்ப் பின்னின்று இயக்குவது உலகத்தை. அது இயக்குவதற்குத் துணைபுரிபவன் இல்வாழ்வானாகிய ஆண். அந்த ஆணுக்குக் காட்சித்துணையாய் விளங்குபவள் வாழ்க்கைத்துணை. காட்சித்துணையான அவள் மூலம் பெறப்படுவது உலகம்.

உலகைத் தோன்றாத்துணையாகப் பின்நின்று இயக்குபவன் கடவுள். அவன் அவ்வாறு இயக்குவதற்குத் துணைபுரிபவன் இல்வாழ்வான்.

உலகம் நிலைபெறக் காரணம் குழந்தை. குழந்தை பிறக்கக்காரணம் தாய். உலகத்தையும், குழந்தையையும், தாயையும் காட்சியளவில் நிரூபிக்க இயலும். மற்றவை அவ்வாறல்ல.

தாயின் சொல்லை நம்பாதவன் தந்தையைக் காண இயலாது.

தந்தையையே காண முடியாதவனால் தந்தைக்குப்பின்னின்று நல்லாற்றில் இயக்கும் இறைவனை எங்ஙனம் காண முடியும்?

ஆண், காட்சியில் பார்க்கக்கூடியவனுயினும் தந்தையாகிய இல்வாழ்வானை **நம்பிக்கையின் அடிப்படையிலேயே உணருகிருேம்.** நம்பிக்கை முழு உருவம் பெறும்பொழுது அவ்வில்வாழ்வானைப் பின்னின்று இயக்கும் கடவுளையும் முழு அளவில் உணரும் உணர்ச்சி நமக்கு வந்து விடுகிறது.

ஆகவே, கடவுளை நாம் உணர்ந்து கொள்வதற்கு நமக்கு நல்லாற்றின் நின்ற துணையாய் இருப்பவனும் இல்வாழ்வானே.

இல்வாழ்வான், உலகைக் கடவுள் இயக்குவதற்குத் துணையாய் இருப்பவன்; உலகம் கடவுளை உணருவதற்கும் துணையாய் இருப்பவன். கடவுள் உலகம் என்னும் இவ்விரண்டு எல்லைகளான மலையின் முடி, கடலின் அடி ஆகிய இரண்டையும் இணைக்கும் '**நல்லாருக**' உள்ளவன் இல்வாழ்வானே.

இந்த இணைப்பை ஓரளவுக்கு விளங்க வைக்கும் பிற்காலத் தொடராக 'மாதா, பிதா, குரு, தெய்வம்' என்பதைக் கொள்ளலாம். தெய்வம் என்னும் சொல் இங்கு முழுமுதற் கடவுளைக் குறிக்கும்படியாகவே ஆளப்பட்டுள்ளது என்பதில் ஐயம் கொள்ளக் காரணம் இல்லை.

காட்சியளவில் நம்பக்கூடிய தாய், காட்சியில் காண இயலாத தந்தையைக் கண்கூடாகக் காட்டுகிருள். தாயின் சொல்லை **நம்பி** அதன் அடிப்படையில் தந்தையைக் காட்சியில் **கண்டு** நம்பும் குழந்தை நம்பப்பட்ட தந்தையின் மூலம் குருவையடைகிறது. ஒரு நம்பிக்கை பிறிதொரு நம்பிக்கைக்கு வழி நடத்துகிறது.

குருவின் கடமை என்ன? தெய்வத்தைக் காட்ட வேண்டுவதன்றே? எல்லாக் குருக்களாலும் அதைச் செய்ய இயல்கிறதா? செய்யக்கூடிய குரு யார்? இருமை வகை தெரிந்து ஈண்டு அறம் பூண்ட ஒழுக்கத்து நீத்தாரையே வள்ளுவர் குருவாகக் கொள்ளுகிறார். காரணம் இவர் நிறைமொழி மாந்தர். மற்ற மனிதர்கள் பேசக்கூடிய மொழி குறைவுடையதே. ஆகவே, அவர்கள் குறை மொழி மாந்தர்களாகத் தானே நிகழ இயலும். ஆனால், இக்குருவோ குறை வற்றவர்; நிறைவானவர். இவரே உலக மக்களின் சிந்தனையாகவும், மொழியாகவும் விளங்கக்கூடியவர். இவரே மொழியாகிய மனிதர். மொழியின்றேல் சிந்தனை வளர்ச்சி இல்லை ஆகவே, மனிதருடைய சிந்தனை வளர்ச்சியின் நிலைக்களமாய் விளங்கும் குறைவற்ற மொழியாகிய நிறைமொழி மனிதர் இவரே இவரைக் காட்டுவதே மறை மொழி.

> "நிறை மொழி மாந்தர் பெருமை நிலத்து
> மறை மொழி காட்டி விடும்"

என்பது வள்ளுவர் வாக்கு.

ஆகவே, இவர் மாந்தர்தான். அதில் ஐயப்பாடு இல்லை. இவரும் இடம், காலம் என்பவற்றிற்கு உட்பட்டவராக விளங்குவதால்தான் 'மாந்தர்' எனக் கூறப்படுகிறார். அதே நேரத்தில் குறை மொழி மனிதரினின்றும் இவர் (குரு) வேறுபட்டவர்; நிறை மொழி மாந்தர். ஆகவே, மற்ற மனிதராகிய குருக்களுக்கும் இவருக்கும் வேற்றுமையுண்டு. மற்றக் குருக்கள் காட்சியளவில் தமது குறைபட்ட மொழிகளால் மாணவனுக்குச் சொல்லத்தான் இயலும். ஆனால், இக்குருவோ மாணவன் உள்ளமாகிய மலரி

லேயே தான் சென்று தனது நிறை மொழியால் மாணவனுக்கு உணர்த்த இயலும்.

இவ்வுண்மையை,

"மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்."

என்னும் குறள் கூறுகிறது.

இவ்வாறு உணர்த்தும் நிலை, காலம் இடம் என்பவற்றிற்கு உட்பட்டதன்று இவ்வாறு இவர் மாணவனின் உள்ளத்தே சென்று உணர்த்தினால்தான் யார் யார்க்கும் ஒழுக்கம் நிலை நிற்கும் ஆகவே, யார் யார்க்கும் ஒழுக்கம் நிலை நிற்கக் காரணமானவர் இவரே.

இதனைத் திருவள்ளுவர்

"யார் யார்க்கும் வானின்றமையா தொழுக்கு"

என்று கூறுவதால் அறிதல் கூடும்.

ஆகவே, வானகை வந்து மலர்மிசையேகி, யார் யார் ஒழுக்கத்திற்கும் காரணமாய் விளங்கும் இயல்பே வள்ளுவரால் 'வான்' எனக் குறிக்கப்படுகிறது. உள்ளத்தே சென்று உணர்த்தக்கூடிய 'வான்' இயல்பினின்றும் மாறுதலையுடைய, எல்லாவற்றையும் கடந்து நின்று உலகைக் கடவும் இயல்புடைய கடவுளையும வள்ளுவர் வாழ்த்துகிறார்.

"அகரமுதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு"

என்பது திருக்குறள்.

ஆகவே, வள்ளுவர் தந்தைக்கு மேல் உள்ள மூன்று இயல்புகளை நீத்தார், வான், கடவுள் எனக்காட்டுகிறார்.

1 இடம் காலங்களுக்கு உட்பட்ட மனித குருவாகிய நிறைமொழி மாந்தர் = நீத்தார்

2 இடம் காலங்களுக்கு உட்படாத, ஆனால், இதய மலர்மிசையேகி மனிதரால் உணரக்கூடியதாகி யார் யார்க்கும் ஒழுக்கம் அமையக் காரணமாவது. = வான்

3. தனக்குவமை யில்லாதவனும், எல்லா உலகுக்கும் முதல்வனுமாகிய ஆதி பகவன் = கடவுள்

தந்தைக்குமேல் உள்ள மூன்று இயல்புகளையுடைய இம்மூன்றும் மூன்று வேறுபட்ட தன்மைகள் அல்ல. கடவுள் இயல்புடைய இம்மூன்றும் ஒருவரையே குறிக்கும். அதுவே கடவுள் எனக்கூறுகிறார் வள்ளுவர். எவ்வாறு?

## 24 இயல்புடைய மூவர்

### கடவுள் வாழ்த்து

| | |
|---|---|
| கடந்து நின்று இயக்கும் கடவுள் இயல் | "அகர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு" —கடவுள் (1) |

| | |
|---|---|
| உள்ளத்தே ஏகி ஒழுக்கத்தை நிலை நிறுத்தும் வான் இயல்பு | மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார் நிலமிசை நீடுவாழ்வார் **வான்** (2) |
| ஒழுக்கத்தைக் காட்ட ஐம்புல மீறைடு வந்த நீத்தார் இயல்பு | பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்கம் நெறிநின்றார் நீடுவாழ்வார் —**நீத்தார்** ( ) |

கடவுள் வாழ்த்திலேயே வள்ளுவர் மூவகைத் தனி இயல்புடைய கடவுளைக் காட்டுகிறார். கடவுள் வாழ்த்தில் "கடவுள்" இயல்பு முழுமையாக விளக்கப்படுவதால் அதனுடன் இணைந்த மற்ற இரு இயல்புகளையும் அதனையடுத்து "வான்" 'நீத்தார்" என இருவேறு அதிகாரங்களாகக் கூறிச் சிறப்பித்துப் பெருமைப் படுத்துகிறார்.

உலகம்—தாய்—தந்தை—நீத்தார்—வான்—கடவுள். தாயின் சொல்லை நம்பித் தந்தையைக் கண்ட குழந்தை குருவையடைந்து வானின் வழியாகக் கடவுளை உணருகிறது. ஆகவே, நம்பிக்கை முழு உருவம் பெறும் பொழுது அவ்வில்வாழ்வானைப் பின்னின்று இயக்கும் கடவுளையும் முழு அளவில் உணரும் உணர்ச்சி நமக்கு வந்துவிடுகிறது அன்றோ?

இவ்வாறு இயல்புடைய மூவரையும்முதல்மூன்று அதிகாரங்களிலும் வாழ்த்திச் சிறப்பித்துப் பெருமைப்படுத்திய வள்ளுவர், அம்மூவர் வழியில் தாம் அறிந்த அறத்தையே நூல் முழுவதிலும் பாடப் பேசுவதாலும், இந்நூல் அவ்வறத்தையே வலியுறுத்திக்காட்டும் நூலாதலாலும், நாலாவது அதிகாரமாக அறத்தை வலியுறுத்திக் கூறிப் பாயிரத்தை முடிக்கிறார்.

பாயிரத்தை முடித்து நூலை தொடங்குங்கால் நூலுக்கு ஆதாரமான அறத்திற்கு அடிப்படையாய் உலக வாழ்வில் துணை நிற்கும் "இல்வாழ்க்கை"யைக் கூறத் தொடங்கி, அவ்வில்வாழ்க்கைக்கு அடிப்படையான இல்வாழ்வான், கடவுள், வான், நீத்தார் ஆகிய இயல்புடைய மூவர்க்கும் நல்லாற்றின் நின்ற துணை எனப் பாயிரத்தில் வகுத்துக் காட்டியவைகளைத் தொகுத்துச் சுட்டிப் பாயிரத்தையும் நூலையும் இணைக்கும் இணைப்புப் பாலமாகவே இக்குறட்பாவைக் கூறுகிறார்.

பாயிரத்தில் வகையை வாழ்த்திய, சிறப்பித்த, பெருமைப்படுத்திய வள்ளுவர் தொகையைக்கூறி நூலைத் தொடங்குகிறார். பாயிரமும் நூலும் வகை தொகை ஆகிய இரண்டின் வழி இணைக்கப்படுகின்றன.

> "இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
> நல்லாற்றின் நின்ற துணை."

என்னும் குறட்பா இணைப்புப் பாலமாக இருக்கிறது. இக்குறட்பா தெரிவிக்கும் நுண் கருத்து யாது?

## 25 தொடர்பு

கடவுளுக்கும் மனிதனுக்கும் உள்ள தொடர்பின் தன்மை இங்கே எடுத்துக் காட்டப்படுகிறது. பொதுவாக, இத்தொடர்பினை இரண்டு விளக்கங்களாகக் கூறுவர்.

### 1, குரங்கியல் விளக்கம் :—

"குரங்கும் அதன் குட்டியும் கடவுளுக்கும் மனிதனுக்கும் உவமிக்கப்படுகின்றன. குரங்கு மரத்

திற்கு மரம் தாவிச் செல்லுகிறது, அதனுடன் இணைந்தே அதன் குட்டியும் செல்லுவதை நாம் காணுகிறோம். குட்டிதாயுடன் செல்லுவது எவ்வாறு? குட்டியின் முயற்சியினாலன்றோ? குட்டி தாய்க்குரங்கை இறுகப்பற்றிக் கொண்டிருக்கும் வரைக்கும் குட்டிக்கு ஆபத்தில்லை. எப்பொழுது குட்டி தன் பிடியை விட்டுவிடுகிறதோ அப்பொழுதே அதற்கு ஆபத்துண்டு. இந்நிலையிலேயே கடவுளுக்கும் மனிதனுக்கும் உள்ள தொடர்பு விளங்குகிறது. மனிதன் தன் முயற்சியினால் கடவுளைப்பற்றிக் கொள்ள வேண்டும். அப்பொழுது அவனுக்கு ஆபத்தில்லை. மனிதன் எப்பொழுது தன் பிடியைக் கடவுளிடமிருந்து தளர்த்துகிறானோ அப்பொழுதே அவன் தீமைக்குட்படுகிறான்".

இக்கொள்கையின்படி மனிதன் தன் முயற்சியினால்தான் கடவுளுடன் இணைந்து வாழ இயலும். குட்டியைப் பிடித்துக் கொள்ளத் தாய்க்குரங்கு எவ்வித முயற்சியும் எடுத்துக் கொள்ளாததைப் போன்றே கடவுளும் விளங்குகிறார் என்பதாகும்.

இதற்கு எதிரிடையானது "பூனை இயல் விளக்கம்" ஆகும்.

## 2 பூனை இயல் விளக்கம் :—

"பூனை குட்டிபோட்டவுடன் அதைப்பாதுகாக்க மிகவும் அதிகமான முயற்சி எடுத்துக் கொள்ளுகிறது; எதிர்களிடமிருந்து குட்டிகளைப் பாதுகாக்கும்பொருட்டு, குட்டியின் இருப்பிடத்தை அடிக்கடி மாற்றிக்கொண்டே இருக்கிறது; அவ்வாறு மாற்றும் பொழுது தாய்ப்பூனை தன் குட்டியை வாயில்

கௌவிக்கொண்டு தூக்கிச் செல்லுகிறது. குட்டி எவ்விதமுயற்சியும் எடுத்துக் கொள்ளுவதில்லை. இவ்வாறே கடவுளும் விளங்குகிறார். அவர் விரும்பிய படியே நம்மை நடத்திச் செல்லுகிறார். நம்முடைய தனி முயற்சி எவ்விதத்திலும்பயன்படாது. குட்டி தனி முயற்சி எடுத்துக் கொண்டால் அது தாயின் முயற்சிக்கு இடையூறாகவே முடியுமன்றோ? அவ்வாறே நமது முயற்சியும் உள்ளது. கடவுளின் வழி நடத்தலுக்கு உட்பட்டு அமைதியாக நடந்து கொள்ளுவதே நமது கடமையாகும். கடவுளே நம்மை நடத்துபவர். நமது முயற்சி எவ்விதத்திலும் பயனற்றது என்பதே இக்கொள்கையாகும்.

மேலே நாம் காணும் இரண்டு கொள்கைகளும் இரண்டு நேர் நேர் எதிர்த்திசையில் சென்று விடுகின்றன. ஆகவே, அவை ஒன்றுக்கொன்று முரண் பட்டு விடுகின்றன. இந்நிலையில் வள்ளுவரின் கொள்கை என்ன? வள்ளுவர் இவ்விரண்டு கொள்கைகளுக்கும் வேறுபட்ட மூன்றாவது கொள்கை யுடையவராகத் திகழுகிறார். அக்கொள்கையை ஒரு வகையாகக் கூறினால் இவ்விரண்டு கொள்கைகளுக்கும் பொதுவானது எனக் கூறலாம். பொதுவான அவ்வள்ளுவர் கொள்கையை நோக்குவோம்.

மனிதனையும் மற்றெல்லாம் படைப்புகளையும் படைத்தவர் இறைவன். 'ஆதிபகவன்' முதற்று இவ்வுலகம், அவர் "தனக்குவமை இல்லாதவர்; இருப்பினும் தாம் படைத்த வற்றுள் மனிதனை மிகவும் உயர்வானவனாகக் கருதுகிறார். மனிதன் தன்னை இறைவனுக்குத் துணையாக எண்ணிக்கூடப் பார்க்க இயலாது, ஆனாலும், இறைவன் தாமே அந்நிலையை மனமுவந்து அளித்துள்ளார். தமது உலகை இயக்

கும் செயலுக்கு அவனைத் துணையாக வைத்துள்ளார். முதல் மனிதன் படைக்கப்பட்ட விதத்தை விவரிக்கும் விவிலியமும், மனிதன் கடவுள் சாயலையுடையவன் எனவும் கடவுளின் ஆவியையே உயிராகப் பெற்றவன் எனவும் கூறுகிறது. மனிதனின் கடமை எல்லாம் அவர் ஏற்படுத்தியிருக்கின்ற நல்லாற்றில் அவருக்குத் துணையாக நின்று செயல்படவேண்டுவதேயாகும். ஆகவே, மனிதனுக்குச் சுயசித்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அவன் இறைவனுக்கு நல்லாற்றின் நின்றதுணையாவான் என்பது வள்ளுவர் கொள்கை. இக்கொள்கையை

> "இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
> நல்லாற்றின் நின்ற துணை."

என்று வள்ளுவர் கூறுவதால் நன்கு அறியலாம். இல்வாழ்க்கை என்னும் அதிகாரத்தில், ஆணையும் பெண்ணையும் ஒருங்கிணைத்தே வளளுவர் கூறியிருக்க வேண்டும். ஆனால், இல்வாழ்க்கை அதிகாரம் முழுவதிலும் ஆணைப்பற்றியே கூறும் வள்ளுவர் வாழ்க்கைததுணையாகிய "பெண்" இன்றி இல்வாழ்க்கை இல்லை என்பதையும் விளக்கு முகத்தான் "வாழ்க்கைத்துணைத் நலம்" எனப் பெயரிட்டுத் தனி அதிகாரம் அமைத்து இல்லாளையும் சிறப்பித்தார். எனவே, 'இயல்புடைய மூவர்க்கும்துணை இல்வாழ்வானுகிய ஆண்; அவனுக்குத் துணை வாழ்க்கைத் துணைவியாகிய பெண்' என ஆணை முதல்வனுகவும் பெண்ணை இரண்டாமவளாகவும் வள்ளுவர் கூறிய போதிலும், 'ஆண்உயர்வா ? பெண் உயர்வா ?' என்னும் கேள்விக்கே இடமில்லாதபடி "இல்வாழ்வான் என்பான் நல்லாற்றின் நின்ற துணை" என்னும் தொடரில் "பெண்ணுடன் கூடி வாழும் ஆணை

துணை'' என்னும் கருத்தை விளக்கிக் காட்டுகிறார். தனி ஆண் ''இல்வாழ்வான்'' ஆகமுடியாதன்றோ?

ஆகவே, மனிதன். இறைவனுக்குத் துணையான உயர்வான நிலையில் இருக்கும் படியாகவே இறைவன் அத்தன்மையை மனிதனுக்குக் கொடுத்துள்ளார். அத்தன்மை தன்னில நிலைத்திருக்கும்படியாக மனிதன் பார்த்துக் கொள்ள, ''நல்லாற்றில் நிற்க வேண்டும்.''

மனிதன் 'நல்லாற்றில்' நிற்பதற்கும் இறைவன் துணைபுரிகிறார். எவ்வாறு? தனக்குவமையில்லாத இறைவன் ''ஐந்தவித்தான்'' என்னும் மனிதநிலையை ஏற்றுப் ''பொய்தீர் ஒழுக்க நெறி''யைக் காட்டியுள்ளார், அப்பொய் தீர் ஒழுக்க நெறியாகிய நல்லாற்றில் நின்றவர்களுக்கு நீடுவாழ்வு உண்டு. அவர்கள் வையத்தில் வாழ்வாங்கு வாழ்வதனுல் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படுவார்கள்.

மேலேயுள்ளவை அத்தனையும் வள்ளுவர் கடவுளுக்கும் மனிதனுக்கும இணைத்துக்காட்டும் தொடர்புகள். இத்தொடர்பு தாய் மட்டுமே முயலும் பூனையின் விளக்கமும் அன்று; குட்டி மட்டுமே முயலும் குரங்கின் முயற்சியும் அன்று. ஆனல், தாய்ப்பூனையின் முயற்சியும், குட்டிக்குரங்கின் முயற்சியும் இணைந்த இணைப்பே கடவுளுக்கும் மனிதனுக்கும் இடையே வள்ளுவர் காட்டும் தொடர்பு ஆகும்.

1 கடவுள் மனிதனுக்குச் சிலவற்றைச் செய்துள்ளார், செய்கிறார். செய்வார்.

2 மனிதன் கடவுளுக்காகச் சில செய்யக் கடமைப் பட்டுள்ளான்.

கடவுள் தன் கையை மனிதனை நோக்கி நீட்டியுள்ளார். மனிதன் தன் கையைக் கடவுளை நோக்கி நீட்டும்பொழுது இருகைகளும் இணைகின்றன. கடவுளுக்கும் மனிதனுக்கும் தொடர்பு ஏற்படுகிறது.
கடவுள் மனிதனுக்காகச் செய்ய வேண்டியவைகளைக் குறைவறச் செய்து வருகிறார். மனிதன் தான் செய்ய வேண்டியவைகளைச் குறைவறச் செய்யும்பொழுது அவன் இறைவனுடன் இணைந்து உறவாடுகிறான். அப்படித் தன்னுடன் இணைந்து உறவாடும் மனிதர் வழியாகக் கடவுள் இவ்வுலகில் தம் விருப்பத்தை நிறைவேற்றி வருகிறார்.

"நல்லாற்றில்" நிற்கும் மனிதன் (இயல்புடைய மூவராக விளங்கும்) கடவுளுக்குத் துணையாவான். அவன் வழியாக அவர் செயலாற்றுகிறார்.

பூனையியல் கொள்கை குரங்கியல் கொள்கை ஆகிய இரண்டு கொள்கைகளுக்கும் பொதுவான கொள்கையே வள்ளுவர் கொள்கை. அதே நேரத்தில் அதுவே இரண்டினும் மாறுபட்ட மூன்றுவதுகொள்கையும் ஆகும். ஆணையும் அவனுக்குத் துணையாகப் பெண்ணையும் படைத்த தனக்குவமையில்லாக் கடவுள் பெண்ணுடன் இணைந்த அவ்வில்வாழ்வானைத் தமக்குத் துணையாகக் கொண்டார். அவ்வில்வாழ்வான் நல்லாற்றில் நிற்கும் பொழுது "துணை" என்னும் அந்த உயர்பதவியைக் காத்துக் கொள்ளுவான், அவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படுவான் எனத் தமது கொள்கையை வள்ளுவர் நமக்கு விளக்குகிறார். இவ்விளக்கத்தின்

நிலைக்களனாகவும், பாயிரத்தில் வாழ்த்திய, சிறப்பித்த, பெருமைப் படுத்திய கடவுள், வான், நீத்தார் ஆகிய வகையைத் தொகுத்துக் காட்டும் தொகையாகவும், பாயிரத்தையும் நூலையும் இணைத்துக் காட்டும் இணைப்பாகவும்

> "இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
> நல்லாற்றின் நின்ற துணை."

என்னும் குறட்பாவை வைத்துள்ள வள்ளுவரின் உள்ளத்தன்மை வணங்கி வாழ்த்தத் தக்கதன்றோ ?

# வரலாற்று நிகழ்ச்சி !

இயல்புடைய மூவரென வள்ளுவரால் வாழ்த்திச் சிறப்பித்துப் பெருமைப்படுத்தப்படும், கடவுள், வான், நீத்தார் ஆகிய மூவரைப் பற்றிய விரிவான விளக்கத்தையும், வள்ளுவரின் இறைக்கொள்கையையும், பாயிர அமைப்பையும் தெளிவாக உணர்ந்து கொள்ள இந்நூலாசிரியரின் முந்தைய நூல்களான

1. திருவள்ளுவர் கிறித்தவரா ?
2. ஐந்தவித்தான் யார் ?
3. வான் எது ?
4. நீத்தார் யார் ?
5. சான்றோர் யார் ?
6. எழு பிறப்பு-?

ஆகிய ஆறு நூல்களையும் நோக்குக. இவ்வாறு நூல்களை ஆராய்வதற்கென,

1. சென்னைப் பல்கலைக்கழகம்,
2. மதுரைப் பல்கலைக் கழகம்,
3. அண்ணாமலைப் பல்கலைக் கழகம்,
4. திருப்பதி வெங்கடேசுவரன் பல்கலைக் கழகம்

ஆகிய நான்கு பல்கலைக்கழங்களையும் சார்ந்த முப்பத்தேழு அறிஞர்கள் ஒன்று சேர்க்கப்பட்டார்கள்.

தமிழக வரலாற்றிலேயே ஒருவர் கருத்தை ஆய்வதற்கெனத் தமிழக அறிஞர்களை ஒன்று சேர்த்து ஆய்வு மாநாடு நாள் கணக்கில் நடத்தப்பெற்றது இதுவே முதன் முறையாகும்.

இம்மாநாடு 1972-ஆம் ஆண்டு மேத்திங்கள் 3, 4ஆம் நாள்களில் சென்னைக் கிறித்தவக் கலைத்தொடர்பு நிலையத்தின் தலைவரான மறைத்திரு. சா. சுவிசேஷ முத்து அவர்களின் நன் முயற்சியால் நடத்தப்பட்டது.

## மாநாட்டில் கலந்து கொண்டவர்கள்

மாநாட்டுச் சிறப்புத் தலைவர் :

மொழிநூல் மூதறிஞர், பண்டித

ஞா. தேவநேயப் பாவாணர், எம்.ஏ. அவர்கள்,

அரங்கத் தலைவர் :

அருள்திரு, சா. சுவிசேஷமுத்து, அவர்கள்,

பி.டி., B. D. எம். டிஎச்.

இயக்குநர், கிறித்தவக்கலைத்தொடர்பு நிலையம்.



ஆய்வுக்குரிய நூல் :

ஐந்தவித்தான் யார் ?

அணித்தலைவர் :

திருக்குறள் பீடம் அழகரடிகள் அவர்கள்

உறுப்பினர்கள் :

1 டாக்டர் சி. பாலசுப்பிரமணியம், அவர்கள்,

எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.

தமிழ் விரிவுரையாளர், சென்னைப்பல்கலைக் கழகம்.

2 பண்ணாராய்ச்சி வித்தகர்,

பேராசிரியர் பி. சுந்தரேசனார் அவர்கள்.

3 திரு. ஜீவபந்து டி. எஸ். ஸ்ரீபால் அவர்கள்,

தலைவர், தென்னிந்திய ஜீவபிரசாரகர் சபை, சென்னை.

4 பேராசிரியர் வி. பா. கா. சுந்தரம், எம்.ஏ. அவர்கள்,

இறையியற்கல்லூரி, மதுரை.

5 செல்வி ப. தமிழ்ச்செல்வி, எம். ஏ. அவர்கள்,

பேராசிரியை, ஆக்சிலியம் கல்லூரி, காட்பாடி விரிவு

ஆய்வுக்குரிய நூல் :

வான் எது ?

அணித்தலைவர் :

பன்மொழிப்புலவர் கா. அப்பாதுரையார் அவர்கள்,
எம்.ஏ., எல்.டி., விசாரத் (இந்தி).

உறுப்பினர்கள் :

1 டாக்டர் என். சுப்பு ரெட்டியார் அவர்கள்,
எம்.ஏ., பிஎச்.டி.,
தமிழ்த்துறை, திருவேங்கடத்தான் கல்லூரி, திருப்பதி.

2 டாக்டர் ஞானப்பிரகாசம் அவர்கள், எம்.ஏ., பிஎச்.டி.,
தமிழ்த்துறை, லயோலா கல்லூரி, சென்னை.

3 பேராசிரியர் லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்
அவர்கள், சென்னை.

4 பேராசிரியர் கே. எஸ். மகாதேவன் அவர்கள், எம்.ஏ.,
மாநிலக்கல்லூரி, சென்னை.

5 தத்துவக்கவிஞர் குடியரசு அவர்கள், சென்னை.



ஆய்வுக்குரிய நூல் :

நீத்தார் யார் ?

அணித்தலைவர்: டாக்டர் வ.சுப. மாணிக்கம் அவர்கள்,
எம்.ஏ., எம்.ஓ.எல்., பிஎச்.டி.,
தலைவர், இந்திய மொழிப்புலம், அண்ணாமலைப்
பல்கலைக் கழகம்.

1 டாக்டர் மு. கோவிந்தசாமி அவர்கள்,
எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,
துணைப் பேராசிரியர், அண்ணமலைப்பல்கலைக் கழகம்.

2 புலவர் மு. சண்முகம் பிள்ளை அவர்கள்,
திருக்குறள் ஆராய்ச்சித்துறை, சென்னைப்பல்கலைக் கழகம்.

3 பேராசிரியர் பொன் ஆ. சத்தியசாட்சி அவர்கள்,
எம்.ஏ., எம்.ஓ.எல், கிறித்தவக்கல்லூரி, தாம்பரம்.

4 பேராசிரியை சரசுவதி இராமநாதன் அவர்கள், எம்.ஏ.,
சீதாலட்சுமி கல்லூரி, பள்ளத்தூர்.

5 பேராசிரியர் இ. சு. முத்துசாமி அவர்கள், எம்.ஏ., பி.டி.,
மாநிலக்கல்லூரி, சென்னை.



ஆய்வுக்குரிய நூல்:

எழுபிறப்பு

அணித்தலைவர்: தவத்திரு. குன்றக்குடி அடிகளார்
அவர்கள், எம்.எல்.சி.

1 டாக்டர் இரா. சாரங்கபாணி அவர்கள்,
எம்.எ., எம்.லிட்., பிஎச்.டி.,
தமிழ் விரிவுரையாளர், அழகப்பா கல்லூரி, காரைக்குடி.

2 வித்துவான் வை. இரத்தினசபாபதி அவர்கள்,
பி.ஓ.எல்., எம்.ஏ. (தத்துவம்),
தத்துவத்துறை, அண்ணமலைப்பல்கலைக் கழகம்.

3 மகாவித்வான் ச. தண்டபாணி தேசிகர் அவர்கள்,

4 ஆராய்ச்சி அறிஞர் மயிலை சீனி–வேங்கடசாமி
அவர்கள், சென்னை.

5 வித்வான் வி. பி. நடராசன், பசுமலை, மதுரை.

எதிர்பாராத காரணத்தால் அடிகளார் வர இயலாமையால், மகாவித்வான் அவர்கள் தலைமை தாங்கினர்கள்.



ஆய்வுக்குரிய நூல் :

## சான்றோர் யார் ?

அணித்தலைவர் : புலவர் குழந்தை அவர்கள்
('இராவண காவியம்' ஆசிரியர்)

உறுப்பினர்கள் :

1 பேராசிரியர் புலவர் நன்னன் அவர்கள், எம்.ஏ.,
தமிழ்த்துறைத்தலைவர், கலைக்கல்லூரி, சென்னை.

2 பேராசிரியர் மோசசு பொன்னையா அவர்கள், எம்.ஏ.,
தமிழ்த்துறைத்தலைவர், அமெரிக்கன் கல்லூரி, மதுரை.

3 திரு. சு. மி. டயசு அவர்கள்,
ஐ. பி. எஸ்., டி.ஐ.ஜி அலுவலகம், சென்னை.

4 திருவாட்டி சாரதா நம்பியாரூரன் அவர்கள், எம். ஏ.,
மேரி அரசியார் கல்லூரி, சென்னை

5 பேராசிரியர் சோம இளவரசு அவர்கள், M. A.
தமிழ் விரிவுரையாளர், அண்ணாமலைப்பல்கலைக் கழகம்.

ஆய்வுக்குரிய நூல் :

திருவள்ளுவர் கிறித்தவரா ?

அணித்தலைவர் : டாக்டர் மெ. சுந்தரம் அவர்கள்,
எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,
தமிழ்த்துறைத்தலைவர், மாநிலக்கல்லூரி, சென்னை.

உறுப்பினர்கள் :

1 பேராசிரியர் க. த. திருநாவுக்கரசு அவர்கள்,
எம்.ஏ. (தமிழ்) எம்.ஏ. (வரலாறு), எம்.லிட்.,
திருக்குறள் ஆராய்ச்சித்துறை, சென்னைப்பல்கலைக்கழகம்.

2 டாக்டர் இராம. பெரிய கருப்பன் அவர்கள்,
எம்.ஏ., பிஎச்.டி.,
தமிழ்த்துறை, மதுரைப்பல்கலைக்கழகம்.

3 டாக்டர் எம். இஸ்ரவேல் அவர்கள், எம்.ஏ., பிஎச்.டி.,
தமிழ்த்துறை, மதுரைப்பல்கலைக் கழகம்.

4 புலவர் க. வெள்ளைவாரணனர் அவர்கள்,
அண்ணாமலைப்பல்கலைக் கழகம்.

5 பேராசிரியர் எழில்முதல்வன், M. A.,
மாநிலக் கல்லூரி, சென்னை.



## தடை செய்யப்பட வேண்டும்.

இம்மாநாட்டு நிகழ்ச்சிகள் நாளிதழ்களில் வெளிவரும் பொருட்டுத் தலைநகரிலுள்ள செய்தி நிறுவனங்கள் அத்தனையும் அழைக்கப்பட்டன. நாள் ஒன்றுக்கு மூன்று நூல்களாக இரண்டு நாள்களிலும் ஆறு நூல்கள் ஆயப் பட்டன. பொதுவாக ஆய்வு மாநாடு நன்முறையில் நடைபெற்ற போதிலும் சில நேரங்களில் அறிவு நிலையைக் காட்டிலும் உணர்ச்சி நிலை ஓங்கி இருந்தது எனலாம்.

★ "தமிழ்நாட்டில் இத்தகைய கருத்துகளைத் தெரி விக்க ஆசிரியருக்கு உரிமை இல்லை."

★ "இப்புத்தகங்கள் யாவும் தடை செய்யப்பட வேண்டும்"

★ "இனி ஆசிரியர் நூல் எழுதக் கூடாது."

★ "அதை வெளியிடவும் கூடாது."

★ "நூல்கள் வெளியிடப்படுமானால் அதை எதிர்த்துப் போராட்டங்கள் நடத்தப்படும்."

என்ற ஆர்ப்பாட்ட ஒலிகள் எழுந்தன. இவை மேடை மீதிருந்தே வந்த போதிலும் இதை எதிர்த்துக் கூட்டத் திலிருந்தும் குரல்கள் எழுந்தன. அவ்வாறு குரல் கொடுத் தோருள் குறிப்பிடத்தக்கவர் 'தமிழ்ப்பணி' ஆசிரியர் கவிஞர் சேதுராமன் முதலியோராவர்.

மாநாடே குழப்பத்தில் முடியுமோ? என்ற நிலையும் ஏற்பட்டது. ஆனால், அரங்கத்தலைமைப்பொறுப்பை வகித்த மறைத்திரு. சுவிசேஷ முத்து அவர்கள் வெகு திறமையாக இந்நிலையைக் கட்டுக்குள் கொண்டு வந்தார்கள்.

நூலாசிரியரைக் குறித்து பேராசிரியர் சோம இளவரசு அவர்கள்,

"நூலாசிரியரை மேடை மீது வைத்துக் கொண்டே அவரை எதிர்த்துக் கண்டனக் கணைகளையும் கேள்விக்கணைகளையும் வீசுவதும், அவர் கொஞ்சமும் அசையாது மலை போலப் புன்சிரிப்புடன் வீற்றிருந்து பதில் கொடுப்பதும் வேடிக்கையாயும் வியப்பாயும் உள்ளன" எனத் தமது உரையின் போது தெரிவித்தது இங்குக் குறிப்பிடத்தக்கது.

## மறைக்கப்பட்டன

செய்தி நிறுவனங்கள் அத்தனையும் அழைக்கப்பட்டிருந்தும் ஒரே ஒரு நாளிதழ் மட்டுமே மூன்று புத்தகங்களின் மறுப்புச் செய்திகளை மட்டுமே வெளியிட்டது. மற்றப் புத்தகங்களைப் பற்றி மறுப்புச் செய்திகளைக் கூட அது வெளியிடவில்லை. மற்ற நாளிதழ்களோ இம்மாநாட்டு எந்நிகழ்ச்சியையுமே வெளியிடாது மறைத்தன.

ஆகவே, வரலாற்றுச் சிறப்பு மிக்க அம்மாநாடு நடைபெற்ற செய்திகளோ, அதில் அறிஞர்கள் வெளியிட்ட நடுநிலை ஆய்வுக்கருத்துகளோ பொது மக்களுக்கு எட்டா வண்ணம் மறைக்கப்பட்டன. எனவே, மாநாட்டில் தெரிவிக்கப்பட்ட கருத்துகள் சில இங்கே கொடுக்கப்படுகின்றன.

விரைவில் வெளிவர இருக்கும் மாத இதழில் மாநாட்டில் வெளியிடப்பட்ட முழுக்கருத்துகளும், அதற்கான விளக்கங்களும் வெளிவர இருக்கின்றன. வாசகர்களும் தங்கள் கருத்தைத் தெரிவிக்க அதில் வாய்ப்பு அளிக்கப்படும். ஆகவே, மாநாட்டில் வெளியிடப்பட்ட கருத்துகளுள் மிகச் சில மட்டுமே இங்கு வெளியிடப்படுகின்றன.

ஆய்ந்து நோக்குக!

ஆழ்ந்து நோக்குக!

## சான்று உண்டா ?

பேராசிரியர் லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்.

" முதல் மூன்று அதிகாரங்களிலும் கடவுள், வான், நீத்தார் என்னும் மும்மை நிலையில் திருவள்ளுவனார் கடவுளைக் காட்டியுள்ளார் என்று இந்நூலாசிரியர் கூறி யுள்ளார். அவர் கூறியதாவது "வான் எது? என்னும் நூலின் 77-ம் பக்கத்தில் சங்க காலத்தில் நம் தமிழகத்தில் பரவியிருந்த கிறிஸ்தவ சமயத்தை நோக்குவோம். கிறிஸ்த வத்தில் கடவுள், நீத்தார், ஆவி ஆகிய கடவுளின் மும்மைக் கருத்துக் கூறப்படுகிறது. கிறித்தவர்கள் கடவுளை வாழ்த் துங்கால் இம்மும்மையையே வாழ்த்துகின்றனர். அவர் களின் வணக்க முறையிலும் இம்மும்மையே இடம் பெறு கிறது என எழுதப் பட்டிருத்தலைக் காணலாம். தம் கருத்து களுக்குச் சான்றுகள் காட்டி வரும் இந்நூலாசிரியர், இக் கருத்திற்குச் சங்க நூற் சான்று காட்டவில்லை."

டாக்டர் அருள்திரு. ஞானப்பிரகாசம் அடிகள்,
M.A.,Ph.D.

"பாயிரத்தில் நான்கு அதிகாரங்களுக்கும் தொடர்பு காட்டும் கடமை, இதுவரை ஆசிரியர்களுக்கு ஒரு சுமை யாக, மனநிறைவளிக்காத கடமையாக, வலிந்து கூறப் படும் விளக்கமாக இருந்து வந்துள்ளது. புலவர் தெய்வநாயகம் தரும் விளக்கம் கிறிஸ்தவ உள்ளத்திற்கு மன நிறைவு தருகின்றது.

" ஓர் ஆசிரியர் தாம் வழிபடும் கடவுளை வணங்குவதும் தாம் எழுதும் பொருளைக் கூறுவதும் இலக்கிய மரபு.

"தெய்வ வணக்கமும் செய்யப்படு பொருளும்.
எய்த உரைப்பது பாயிரகும்."

என்று இலக்கணம் இயம்புகிறது. இந்த மரபைப் பின் பற்றும் முறையில் வள்ளுவர் பாயிரத்தின் மூன்று அதிகாரங்களில் தாம் வழிபடும் கடவுளை ஒருமையில் மும்மையாய் விளங்கும் கடவுளை - திருத்தந்தை, திருமகன், தூய ஆவி ஆகியவற்றாய் இலங்கும் கடவுளை - முறையே கடவுள் வாழ்த்திலும், நீத்தார் பெருமையிலும், வான் சிறப்பிலும் வணங்கிவிட்டு, அறன் வலியுறுத்தலில் தாம் எழுதவிருக்கும் நூல் அறநூல் என்பதை எடுத்துரைக்கின்றார். இவ்விளக்கத்தால் பாயிரத்தின் ஆழம் நமக்கு ஓரளவு விளங்குகிறது என்று புலவர் தெய்வநாயகம் அடக்கத்துடன் எழுதுகின்றார்.

"இது பலருக்கு ஏற்றுக் கொள்ளத் தகாததாகத் தோன்றலாம். ஆனால், எந்த அலுவல் தொடங்கினாலும் குடித்தாலும் உண்டாலும் கடவுளின் பெயரால் செய்யுங்கள் என்று இயேசுவின் சீடர் புனித சின்னப்பர் சொன்னதற்கிணங்க, எந்தச் செயலையும் இறைவனுக்காக இயற்றும் கிறிஸ்தவர்களுக்கு எந்தச் செயலையும் 'பிதா சுதன் பரிசுத்த ஆவி இவர்களின் பெயரால்' என்று சொல்லி நெற்றியிலும் நெஞ்சிலும் தோளிலும் சிலுவை அடையாளம் வரைந்து கொண்டு தொடங்கும் கிறிஸ்தவர்களுக்கு இது ஏற்றுக் கொள்ளத்தக்கது."

## கிறித்தவம் பரவியதா?

டாக்டர் சி. பாலசுப்பிரமணியம், M.A., Ph.D.

"ஆதலால் முழுக்க முழுக்க இந்நாட்டிற்கே உரிய செய்திகளையும் கதைகளையும் வலிந்து தம் ஆராத சமயப் பற்றால் புலவர் தெய்வநாயகம் அவர்கள் 'விசும்புளார் கோமான் இந்திரன்' என்பதற்குத் தேவதூதன் எனப்

பொருள் கொள்கிறார். அத்தொன்னெடுங்காலத்தின் நாட்டு வரலாறு, இலக்கிய நோக்கு, சமயநிலை, சமுதாயச் சூழ்நிலை இவற்றைச் சற்று மேற்போக்காகக் கண்ணோட்ட மிட்டாலும் அக்காலத்தில் கிறிஸ்தவ சமய உண்மைகள் தமிழகத்தில் ஆசிரியர் தெய்வநாயகம் சுட்டும் அளவிற்குப் பரவியிருக்க வழியே இல்லை.''

பேராசிரியர் சத்தியசாட்சி, M.A., M.O.L.

'' திருவள்ளுவர் வாழ்ந்து கொண்டிருந்த காலத்தில் கிறிஸ்தவ மதம் அல்லது கிறிஸ்தவ சமயம் என்ற ஒன்றிருக்கவில்லை. ஆனால், கிறிஸ்துவினால் ஏற்படுத்தப் பட்ட இயக்கம் இருந்தது. விவிலியத்தில் ''புதிய உடன் படிக்கை'' என்னும் பகுதியில் மகத்தானதோர் இயக்கம் கிறிஸ்துவின் மாணாக்கர்களால் உலகெங்கும் பரவலாயிற்று. அந்தக் காலம் தமிழ் நாட்டில் மூன்றாவது சங்கம் இயங்கிக் கொண்டிருந்த காலமாகும். தமிழ்நாட்டைப் பொறுத்த வரையில், தனிப்பட இயங்கிய மதம் அல்லது சமயம் என்று ஒன்றில்லாத காலம் அது. கடவுள் நம்பிக்கையும் பற்றும் இருந்தது உண்மைதான். ஆனால், சமய வேறுபாடு என்பதோ, அதனடிப்படையில் பகையுணர்ச்சி என்பதோ, வேறுபாடுகளை உண்டாக்கிக் கொண்டு அந்த வேறுபாடு களைக் கட்டுப்பாடுகளாக்கிக் கொண்டதோ ஆகிய எந்தக் கொடுமையும் நிகழாத காலம் அது. மதத்தின் பெயரால் மாந்தர் எதிர் வழக்கிட்டு மாயாத காலம்..................... சிலுவை என்ற கொலை மரத்தில் அறையப்பட்டு மரண மடைந்து, மரணத்தினை வென்று, மீண்டும் உயிருடன் எழுந்த ஒருவரைத் தலைமையாகக் கொண்ட இயக்கம் மத்திய தரைக்கடலைச் சுற்றியிருந்த நாடுகளில் காட்டுத் தீப்போலப் பரவலாயிற்று. அக்காலத்தில் தமிழகத்திற்கும் மேலை நாடுகளுக்கும் இருந்த வாணிகத் தொடர்பு முதலிய வற்றைச் சிந்தனை செய்யும் போது அந்தப் புதிய இயக்கம் தமிழ் கூறும் நல்லுகத்திலும் வேர் ஊன்றலாயிற்று என்று கொள்வதற்குத் திருக்குறள் இடம் தருகின்றது.''

## இந்திரன் இந்து மதமே

செல்வி ப. தமிழ்ச்செல்வி, M. A.

"வள்ளுவரின் இறைக்கொள்கைக்கருத்துகள் கிறிஸ்தவத்துடன் இணைந்திருப்பதாக ஆசிரியர் கூறிய வற்றை ஏற்றுக்கொள்ள இயலாது; ஏனெனில் உலகப் பொதுமறை என்று எல்லா மக்களாலும் பாராட்டப்படும் பெருமை பெற்ற திருக்குறள் எல்லாச் சமயத்தார்க்கும் எக்காலத்தவர்க்கும் உரியதே யன்றி, ஒரு குறிப்பிட்ட சமயத்திற்குரிய நூல் என்றும், வள்ளுவர் அச்சமயத்தைச் சார்ந்தவர் என்றும் கூறிக்கொள்ள ஒருவருக்கும் உரிமை இல்லை. 'இந்திரன் என்னும் பெயர் தமிழ்மொழியில் அமைக்கப்பட்டிருக்கும் பொதுப் பெயரேயன்றி, அது குறிப் பிட்ட ஒரு சமயத்திற்குரிய தனிப் பெயர் அன்று' என்பது புலவர் தெய்வநாயகம் அவர்களின் கூற்று. இந்திரன் என்னும் பெயர் பொதுப் பெயராக இருப்பின், வேறு எச் சமயத்திலாவது அதாவது கிறிஸ்தவ சமயத்திலோ, இஸ் லாமிய சமயத்திலோ, புத்தசமண மதங்களிலோ இந்திரன் என்றோ சந்திரன் என்றோ நாம் காண முடிகிறதோ? இந்திரன் என்னும் சொல் இந்து மதத்திற்குரிய சொல்லே என்று அறுதியிட்டுக் கூறலாம்."

திரு. ஜீவ பந்து, டி. எஸ். ஸ்ரீபால்

"இந்திரனைப் பற்றிப் பல்வேறு சமய நூல்களில் காண்கிறோம். ஜைன (சமணம்) நூல்களிலும் இந்திரன் வரலாறுகள் காணப்படுகின்றன,.....................

"இத்தகு சிறப்பமைந்த உண்மை நிகழ்ச்சியை மறைத்து இந்திரன் கௌதம முனிவரின் மனைவியைக் கற்பழித்ததன் காரணமாக அம்முனிவரின் சாபத்திற் குள்ளாகி உடலெல்லாம் சொல்லொணுக் குறிகளையுடை யனுனன் என வைதீக சமய நூல்கள் கூறுகின்றன. இக் கொள்கையைப் பரிமேலழகரும், தற்கால உரையாசிரியர்கள்

சிலரும் ஏற்றுக் கொண்டுள்ளது வருந்தத்தக்க செய்தியாகும். வைதீகச் சமயக் கூற்றால் ஐந்தவித்துயர்ந்தோரின் தூய தவநெறியும் அறவோரைப் போற்றும் இயல்புடைய இந்திரனின் எழில் நிலையும் மாசடைகின்றன.''

## யாராலும் கூற இயலாது.

பேராசிரியர் க. த. திருநாவுக்கரசு,
M. A., M. Litt., Dip. Ling.,
திருக்குறள் ஆராய்சித்துறை, சென்னைப்பல்கலைக் கழகம்.

'' திருவள்ளுவருடைய காலத்தைத் தம்முடைய கருத்தை நிலைநாட்டுவதற்கு ஏற்ற வகையில் கி. பி. முதல் நூற்றாண்டின் முற்பகுதி என்று ஆசிரியர் வரையறுத்துக் கொள்வது உண்மை நாடும் நோக்கமாகாது. .................. திருவள்ளுவருடைய காலத்தை யாராலும் திட்டவட்டமாக அறுதியிட்டு உறுதியாகக் கூற இயலாது.

பேராசிரியர் இ. சு. முத்துசாமி, M.A.,
மாநிலக்கல்லூரி, சென்னை.

'' 1969இல் வெளிவந்த திருவள்ளுவர் கிறித்தவரா?'' என்னும் நூல் குறள் ஆய்வுத் துறையில் விழிப்பை ஏற்படுத்தியுள்ளது. பெரும்பாலான ஆராய்ச்சியாளர்கள் ஒப்ப முடிந்த கி.மு. 31 என்னும் வள்ளுவர் காலக் கோட்பாட்டையே இந்நூலாசிரியரும் ஏற்றுக் கொள்கின்றார் ''

## கதையளக்கிறார்.

பேராசிரியர் திருநாவுக்கரசு, M. A.

" கிறிஸ்தவ சமயக் கொள்கையைத் திருக்குறளில் திணிப்பதற்கே தம் மனம்போன போக்கில் பிறப்பு பிறவியைக் குறிக்கவில்லை என்றும் எழுபிறப்பு — ஏழுவகைப் பிறப்பைக் குறிக்கவில்லை என்றும் அவர் கதையளக்கிறார்.''

ஆராய்ச்சி அறிஞர் மயிலை சீனி வேங்கடசாமி

"எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்
விழுமம் துடைத்தவர் நட்பு"

என்னும் குறளுக்குப் பழைய உரையாசிரியர்கள் கூறுகிற "ஏழு மறு பிறப்பு" என்னும் கருத்தைவிடப் புலவர் தெய்வநாயகம் அவர்கள் கூறுகிற "ஏழு தலைமுறை" என்னும் கருத்துப் பொருத்தமாகவும் ஒருவாறு ஏற்கத் தக்கதாகவும் இருக்கிறது. முன்பிறப்பில் செய்தவை ஒன்றுமே இந்தப் பிறப்பில் தெரியாமலிருக்கும்போது ஏழு பிறப்பிலும் நன்றியை நினைப்பார்கள் என்று கூறுகிற உரை பொருத்தமாகவும் ஏற்றுக்கொள்ளத்தக்கதாகவும் இல்லை. ஆனால், பாட்டன் பெற்ற நன்றியை அவனுடைய தலைமுறையினர் தொடர்ந்து, நினைப்பார்கள் என்று புலவர் தெய்வநாயகம் கூறுகிற கருத்து ஒருவாறு பொருத்தமாகவும் ஏற்கத் தக்கதாகவும் இருக்கிறது."

டாக்டர் இரா. சாரங்கபாணி, M.A. Ph,D.

"ஏழு பிறப்பு என்னும் நூலின் ஆசிரியர் புலவர் தெய்வநாயகம் அவர்கள் தம் நூலில், எழுமை, எழு பிறப்பு, பிறப்பறுக்கல், இருள், இருவினை, வகுத்தான் முதலிய குறளில் பயின்றுவருஞ் சொற்களுக்குத் தம் நுண்மாண் நுழைபுலத்தால் இலக்கியச் சான்றுகளுடன் நல்ல விளக்கம் தந்துள்ளார்கள். ஒருமை என்னும் சொல் ஒரு நிலை என்னும் பொருளில் வந்துள்ளதை எடுத்துக் காட்டி, எழுமை என்பது-எழுநிலை–பல நிலையைக் குறிப்பதாகும் எனக் கூறுவது பொருத்தமானதாகும். எழுபிறப்பு என்புழி வரும் ஏழு என்பதன் குறுக்கமாகிய எழு என்பது பன்மைப் பொருளதே என்று கூறி அதற்குச் சான்றாக

'ஒருநாள் எழுநாள்போற் செல்லும்' (1269)
'எழுநாளேம் மேனி பசந்து' (1278)

என்று குறளடிகளை மேற்கோள் காட்டியிருப்பது அவர் தம் கருத்துக்கு நல்ல அரண் செய்வதாகும்."

## துணிந்து பெரும் பழியைத் தூற்றுகிறார்.

பேராசிரியர், புலவர், மா. நன்னன். M.A.

"வள்ளுவர் இறைவனையே மிக உயர்ந்த குணமுடையவனாகக் காட்டுகின்றார். அவர் காட்டும் இறைவன் உலகமக்களுக்காகத் தன்னையே துன்பத்திற்காளாக்கி மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு, பொய்தீர் ஒழுக்க நெறியைக் காட்டிய அறவாழி அந்தணன் ஆகிய ஐந்தவித்தான்"—இது இவ்வாசிரியரின் அஞ்சத்தக்க துணிச்சலுக்கு எஞ்சுதலில்லா மற்றொரு சான்றாகும்.

" சான்றோர் என்பதைச் " சாட்சிக் கூறும் பெரியவர்கள் " என்று தம் விருப்பம் போலப் பொருள் கொண்டு தூய தோமையார் முதலிய கிறித்துவ அடியார்களையே வள்ளுவரும் பிறசங்கச் சான்றோரும் "சான்றோர்" எனக் கூறினர் எனக்காட்டிக் கி. பி. முதல் நூற்றாண்டில் தூய தோமையர் தமிழ் நாட்டுக்கு வந்து மயிலாப்பூரில் தங்கியிருந்த போது திருவள்ளுவர் தோமையாருடன் நெருங்கிப் பழகி அவர் உரைத்த கிறிஸ்துவின் கருத்துகளையே தம் நூலில் திருவள்ளுவர் எழுதியிருக்கிறார் என்று இந்நூலாசிரியர் துணிந்து பெரும் பழியைத் தூற்றுகின்றார்."

பேராசிரியை சரசுவதி இராமநாதன், M. A.

" எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்ட நிலை ஒருவருக்கே சிறப்பாக உரிமையாகிறது. அவர் யார்? இயேசு பெருமானே. மன்னுயிர் வாழத் தன்னுயிர் தந்த வரலாறு —புத்தர், நபிகள், இராமன், கிருஷ்ணன், மகாவீரர்.... எவரது வாலாறும் இல்லை.

" அத்துடன் எல்லா அவதாரமும் அனைத்துயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகியதாகத் தெரியவில்லை. துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனம் எனும் போதே சிலருக்கு நன்மையும் சிலருக்குத் தண்டனையும் தர வந்தது என்று சில அவதாரங்கள் பேசப்படுகின்றன. ஒரு பிரகலாதனைக்காக்க

இரணியனுக்குத் தண்டனை கிடைக்கிறது. அமரர் இடர் தீர்க்க இராவணனுக்குத்தண்டனை கிடைக்கிறது. தீமைக்குப் பதிலாகத் தீமை கிடைப்பதைக் காட்டும் அவதாரங்களைவிட அருள் நெறி போதித்த புத்தர், மகாவீரர் அவதாரங்கள் மக்களைக் கவர்ந்தது உண்மை. ஆனால், அங்கும் காணப் பெருத மாபெரும் தியாகம் இயேசுவின் வரலாற்றில் உள்ளது.

" தன்னைக் கொல்ல வந்தவர்க்கும் கருணை காட்டிய அந்தச் செந்தண்மைக்கு எது ஈடாகும்? மற்றெவ்வுயிர்க்கும் தன்னைக் கொல்லும் பாவி உயிர்க்கும்) கருணை வேண்டிய செந்தண்மையாகிய அந்தண்மை- அறவோனாகிய இயேசு பெருமானிடமே காணப்படுகிறது. பாவிகட்காகவும் மன்ருடிய குணம் எனும் குன்றேறி நின்ற நீத்தார் பெருமையை மறைமொழியாகிய விவிலியம் காட்டி நிற்கிறது. வள்ளுவரை உலகறியச் செய்த மிகப் பெரிய தொண்டைச் செய்தது கிறித்தவ சமயம் ஒன்றே. பலவகையானும் இயேசு பெருமானின் மலைப் பிரசங்கத்தின் எதிரொலியாக விளங்கும் குறளைக் கிறித் தவரே பல மொழிகளில் மொழி பெயர்த்துப் போற்றியுள் ளமை நோக்கத்தக்கது. சமயச் சின்னம் போட்டு வள்ளுவர் படத்தை எழுதுவதாலோ குறளிலுள்ள இரண்டு மூன்று சொற்கள் தம் சமயத்திற்கு ஏற்றவை என்று காட்டுவதாலோ வள்ளுவரின் சமயத்தைப் பற்றிய ஆராய்ச்சி முடிவு நிலை பெருது. வள்ளுவர் காலம் கிறித் துவுக்குப்பின் தான் என்பது பலரின் ஆய்வு கண்ட முடிவு. ஏறத்தாழ அவர் காலம் புனித தோமையர் தமிழகத்திற்கு வந்த காலம் ஆகலாம். மயிலைப் பகுதியில் இருவரும் வாழ்ந்த போது, புதிய செய்திகளும், இயேசு என்ற நீத்தாரின் வாழ்க்கையும், நிறை மொழியும் பற்றி வள்ளுவர் கேட்டு நெஞ்சம் நெகிழ்ந்திருக்கலாம். தமிழன் வாழ்வில் மதம் என்ற பெயரால் மதம் ஏருமலிருந்த காலம் அது. "யாதும் ஊரே; யாவரும் கேளிர்" என வாழ்ந்த தமிழனுகிய வள்ளுவனும் அனைத்து அவதாரர்களின் வாழ்விலும்,

வாக்கிலும் இருந்த நல்லம்சங்களைச் சேர்த்து வாழ்வியல் நூலாக வள்ளுவத்தைத் தந்திருக்கலாம்''.

## அறிஞர் பாராட்டார்

டாக்டர் N. சுப்பு செட்டியார், M. A. Ph. D.,
திருப்பதி வெங்கடேசுவரன் பல்கலைக்கழகம்.

"தற்சமயம் புலவர் தெய்வநாயகம் அவர்களின் ஆராய்ச்சி பாயிரத்துள் நிற்கின்றது. எதிர்காலத்தில் ஆசிரியர் நூலினுள் புகுந்து என்னென்ன செய்ய நினைத்துள்ளாரோ என்பது அறியக் கூடவில்லை. இவர் ஆராய்ச்சி சாதாரண மக்களுக்கு மருட்சியைப் பயப்ப தாயினும் அறிஞர், புலவர் பெருமக்களின் கருத்தினைக் கவராது; பொது மக்களின் கைதட்டலைப் பெறலாம்; அறிஞர்களின் பாராட்டுதலைப் பெற இயலாது.''

புலவர் வெள்ளை வாரணனர்,
அண்ணுமலைப் பல்கலைக் கழகம்.

"இந்நூல்களின் ஆசிரியராகிய புலவர் மு. தெய்வ நாயகம் அவர்கள் மேற்கொள்ளும் ஆராய்ச்சி முறையும் ஒத்த கருத்துகளைத் தொகுத்து நோக்கிச் சீர் தூக்கி முடிவு காணும் திறமும், பிறர் கருத்துகளை வேண்டிய இடத்துத் தமக்கு ஆதரவாக எடுத்துக் காட்டித் தன் கோள் நிறுவும் திறமும் அறிஞர்களால் வியந்து பாராட்டத் தக்கன. இவர்களுடைய பல நூலறிவும் பன்மொழிப் புலமையும் புதிய முடிவுகளை நிலை நிறுத்தும் போக்கிற்குப் பெரிதும் துணை செய்கின்றன."

மகாவித்வான் தண்டபாணி தேசிகர்,
அண்ணுமலைப் பல்கலைக் கழகம்.

"ஆசிரியருடைய பல நூலறிவும், பன்மொழிப் புலமை யும், புதுமை காணும் போக்கில் இவர்களை மிக மிக ஊக்கி யிருக்கிறது என்பதையுணரும் போது சில முடிவுகள் ஒவ்வாவாயினும், முடிவிற்கு நம்மை கூட்டிச் செல்லும் முறை மிகுந்த பாராட்டுக்குரியது."

டாக்டர் இராம. பெரியகருப்பன் M. A., Ph. D.,
மதுரைப்பல்கலைக்கழகம்.

"திருவள்ளுவர் கிறித்தவரா ?" முதலிய ஆறு நூல்களையும் எழுதிய புலவர் மு. தெய்வநாயகம் திருக்குறட் சிந்தனையைத் தமிழகத்தில் மீண்டும் உயிர்த்தெழச் செய்திருக்கிறார்.

"புலவர் மு. தெய்வ நாயகம் மிகப் பொறுமையாக எவ்விடத்திலும் உணர்ச்சி வசப்படாமல் இவ்வாய்வை நடாத்திச் செல்கிறார். அதன் வன்மை மென்மைகளைக் காணவேண்டுவது நம் கடமையாகும்."

பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரையார்,
M. A. (ஆங்கிலம்), M. A. (தமிழ்), விசாரத்,
ஆசிரியர். "மணி விளக்கவுரை".

"ஆய்வாளர் முடிவுகள் திருக்குறளாராய்ச்சியில் புது வழி புதுத்திருப்பம் உண்டுபண்ணுபவை என்பதில் ஐயம் இல்லை. தமிழகத்திலிருந்து பிறக்கும் இப்புத்தொளி திருக்குறள் போலவே, விவலிய ஏட்டையும், திருக்குரான் ஏட்டையும் போலவும் உலகெலாம் பரந்து ஒளி வீசிப் புதிய உலகை ஒளியுலகத் தெய்வீக அரசை நிறுவப்பயன்படுவதாக அமைக."

## கண்களில் ஏதோ கோளாறு

பேராசிரியர் திரு. க. த. திருநாவுக்கரசு, M.A.

"திருக்குறளின் கடவுள் வாழ்த்தில் ஒரே பரம் பொருளைத்தான் நாம் காணுகின்றோம். புனித ஆவியையோ திருக்குமாரனையோ நாம் காணமுடியவில்லை. அவற்றை அங்குக் காணுகிறோம் என்று சொல்லுகின்றவர்களுடைய கண்களில் ஏதோ கோளாறு இருக்கிறது என்பதுதான் பொருள்."

டாக்டர் மு. கோவிந்தசாமி, M.A., Ph. D.,
தலைவர், திருக்குறள் ஆராய்ச்சித்துறை,
அண்ணாமலைப்பல்கலைக்கழகம்.

"ஐந்தவித்தான்; இறந்தாரை எண்ணிக் கொண் டற்று, நிறைமொழிமாந்தர் என்னும் குறள்களைக் கொண்டு நீத்தார் எனக் குறள் குறிப்பது "இல்லறம் துறவறம் இரண்டும் கடந்தவரை; மனிதனாக வந்த இறைவனை; ஆண்மகனை, இறப்பை வென்றவனை; ஐம்புலனையும் பலியாகக் கொடுத்தவனை; உலகைத்தன்னிடம் கொண்டு வரும்படி ஐந்தின்வகை தெரிந்தவனை; நிறைமொழி யாகிய வார்த்தையானவனை என எடுத்துக் காட்டி இவை யனைத்தும் இயேசு பெருமான் ஒருவர்க்கே பொருந்தும் என உரைப்பதே இந்நூலின் நோக்கமாகும். அது நன்கு நிறைவேறியுள்ளது. கிறித்துவர்க்கும் மற்றச் சமயத் தார்க்கும் இஃதொரு அறிவுக்கண் திறப்பாகும்."

## மறைக்கவோ மறுக்கவோ இயலாது.

டாக்டர். இசுரவேல், M. A., Ph. D.,
மதுரைப் பல்கலைக் கழகம்.

"இறுதியாக, திருவள்ளுவர் கிறித்தவரா?" என்னும் வினாவை எழுப்பி அவர் கிறித்தவரே என்று கூறி முடிக்கும் ஆசிரியரின் ஆய்வுத் திறன், உண்மை நாட்டம், அணுகும் முறை, ஆய்ந்த படிப்பு, சொல்லாற்றல், துணிச்சல் முதலியன மாற்றாரும் போற்றும் தன்மையனவாய், ஏற்கா தவரும் ஏற்குந் தன்மையனவாய் அமைகின்றன. புலவர் தெய்வநாயகம் அவர்களின் ஆய்வு புரட்சிகரமானது, புதுமையானது, உண்மைகாணத் தூண்டுவது, சீர் தூக்கிக் காணும் தன்மையது. ஆகவே, ஆசிரியர் அவர்கள் முயற்சி யைத் தமிழறிஞர் எவரும் பாராட்டாதிரார். அவர் கூறும் முடிவு ஏற்கத் தக்கதோ மறுக்கத் தக்கதோ என் பதற்கு ஆய்வாளர் உள்ள நிலையே உண்மைப்பதிலை அளிக்கும். அவர் வள்ளுவர் கிறித்தவரா? என்னும் வினாவினை எழுப்பி, ஆம்! அவர் கிறித்தவரேதான் என்று

சான்றுகளால் நிறுவியிருப்பதனைத் தமிழகம் ஏற்கலாம், அன்றேல் அது இன்னும் ஆய்ந்து முடிவு செய்யத்தக்கது எனலாம். இல்லையேல் அதனை முற்றிலும் மறுத்துவிடலாம். அன்றேல் அவரது முயற்சியினை எள்ளி நகையாடலாம். ஆனால், அவர் நூலை நன்கு பயிலுவார்க்கும் திருமறையையும் தமிழ் மறையையும் ஒத்துநோக்கி நுட்பமாய் ஆய்வார்க்கும் திருக்குறள் கிறித்தவக் கொள்கைகளுக்குப் பெரிதும் இடம் தருகிறது என்பதனை மறைக்கவோ மறுக்கவோ இயலாது."

## நோக்கம் என்ன?

டாக்டர் வ. சுப. மாணிக்கம், M. A., ph. D.,
அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைத்தலைவர்.

"புலவர் திரு. மு. தெய்வ நாயகம் தெய்வத் திருக்குறள் பற்றித் தனி முறையில் வரிசையாக ஆய்வு நூல்கள் எழுதி வருகிறார். இவர் ஆய்ந்த நூல் முடிபு யாதாக இருப்பினும், நூலின் பெயர்களை வினாவாகவே அமைக்கின்றார்; நூலின் இறுதியிலும் வினாவாகவே முடிக்கின்றார் என்பதனைச் சுட்டிக் காட்ட விரும்புகின்றேன். திருவள்ளுவர் கிறித்தவரா? ஐந்தவித்தான் யார்? நீத்தார் யார்? வான் எது? சான்றோர் யார்? இவ்வாறு நூற்பெயர்களை அமைத்திருத்தலால் உண்மைகாண முயல்வதும், உண்மைகாட்ட வாருங்கள் எனப் பிறரை அழைப்பதுமே இவர் நோக்கம் என்பது பெறப்படும்

"இதுவே ஆய்வரங்கத்தை நடத்த முன் வந்திருக்கும் கிறித்தவக்கலைத்தொடர்பு நிலையத்தினர்க்கும் நோக்கமாகும். என் போல்வார் கலந்து கொள்ள வேண்டுமென்று எழுதிய கடிதத்தில் திரு. தெய்வ நாயகத்தின் ஆராய்ச்சி முடிவுகள் தமிழறிஞர் உலகில் ஏற்புடையனவா? அவருடைய நூல்களில் கொள்ளத்தக்கன அல்லது தள்ளத்தக்கன எவ்வெவை என்பதை அறியும்நோக்குடனேதான் இந்த ஆய்வரங்கம் கூட்டப்படுகின்றது என்று தெளிவாகத் தம் நோக்கத்தினை நிலையத்தினர்

வரைந்துள்ளனர். ஆதலின் இவ்வரங்கம் மதச்சார்பான அரங்கம் அன்று; தமிழரங்கம், தமிழ்மறையரங்கம் என்று கொள்கின்றேன்."

## தூய்மையான ஆராய்ச்சி மலர

அருள்திரு. சா. சுவிசேஷமுத்து பி. டி., B. D., எம்.டிஎச், இயக்குநர், கிறித்தவக்கலைத்தொடர்பு நிலையம்.

" திருக்குறள் ஆய்வு மாநாடு ஒன்று 1972-ம் ஆண்டு மேத் திங்கள் 3,4 தேதிகளில் சென்னையில் நடைபெற்றது. தேனும்பேட்டையில் இருக்கும் கிறிஸ்தவக் கலைத்தொடர்பு நிலையத்திடலில் தமிழ் அறிஞர்கள் பலர் ஒன்று கூடி ஆய்வ தற்கெனத் தெரிந்து கொள்ளப்பட்ட பொருள் வள்ளுவரின் கோட்பாடுகள் கிறிஸ்தவக்கோட்பாடுகள் தாமா என்பது. இப்பொருளைத் தெரிந்தெடுப்பதற்கும் காரணமாயிருந் தவை புலவர் தெய்வ நாயகம் அவர்கள் எழுதிய ஆறு நூல்கள். அவை,

ஐந்தவித்தான் யார் ?

வான் எது ?

நீத்தார் யார் ?

ஏழு பிறப்பு ?

சான்றோர் யார் ?

திருவள்ளுவர் கிறித்தவரா ?

" இந்நூல்களின் அடிப்படையில் ஓர் ஆய்வு மாநாட் டைக் கூட்ட வேண்டும் என நான் எண்ணியதற்கு இரு காரணங்கள் இருந்தன. புலவர் தெய்வ நாயகம் தர்க்க ரீதி யாக, இலக்கண ரீதியாக, வரலாற்று அடிப்படையில், பல பிற தமிழறிஞர்களின் ஆய்வு முடிவுகளைத் துணைக்கழைத் துக்கொண்டு கிறித்தவமும் திருவள்ளுவரின் கோட்பாடு களும் ஒன்றே என்று உறுதியுடன் கூறுகிறார். இவரு

டைய ஆய்வு முடிவுகள் தமிழ்ப் பேரறிஞர்களால் எவ்விதம் ஏற்றுக் கொள்ளப்படும் என்பதை அறியவேண்டும் என்ற அவா முதற்காரணம். இரண்டாவது காரணம் தன்னல முடையது. உண்மை என்ன? என்பதை நானே அறிந்து கொள்ள வேண்டுமென்பது.

"மாநாட்டின் சிறப்புத் தலைவராக மொழி நூல் மூதறிஞர், பண்டித ஞா. தேவநேயப் பாவாணர், எம்.எ. அவர்கள் விற்றிருக்க, ஆய்வு மாநாட்டை நடத்திச் செல்லும் அரங்கத் தலைவராக நான் அமர்ந்து, அறிஞர்களின் ஆய்வு உரைகள் ஒவ்வொன்றையும் கேட்டேன்.

"தமிழகத்தில் தனிச்சிறப்புடையோரும், ஆழ்ந்த அறிவு படைத்தவர்களும், தமிழுலகில் தமிழன்னையின் தவப் புதல்வருமாகிய பேரறிஞர்களின் நடுவில் அமர்ந்திருந்து அவர்களின் தேன் நிகர் தமிழ் ஆய்வுக்கட்டுரைகளைக் கேட்டுக் கொண்டிருந்த அந்த நாள்கள் என் வாழ்வில் ஒப்பற்ற நாள்கள்.

"எனினும், மாநாட்டின் முடிவில் நான் குழப்பமுடையவனாகவே இருந்தேன். ஏனெனில், புலவர் தெய்வநாயகம் திருக்குறள் ஆராய்ச்சியின் பயனாக எழுப்பியுள்ள வினாக்களை, அவ்வினாக்களுக்கு அவரே உணர்த்தும் விடைகளைத் தர்க்க ரீதியாக, வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு, இலக்கண இலக்கிய மேற்கோள்களுடன் ஒருவராவது ஆணித்தரமாக மறுத்துக் கூறவில்லை, மாறாகத் தெய்வநாயகத்தின் புலமையைப் பாராட்டினார்கள். அவர் காண்பிக்கும் முடிவுகளுக்கு அவர் தர்க்கரீதியாக அறிஞர்களின் பல மேற்கோள்களுடன் நடத்திச் செல்லும் முறையைப் பாராட்டினார்கள். ஆனால் 'முடிவுகள், ஏற்றுக் கொள்ளப்பட முடியாதவை' என்றனர் சிலர். வேறுசிலர் ஏற்றுக் கொள்ளாமலிருக்கக் காரணங்கள் இல்லை என்றும் கூறினர்.

" முடிவுகள் ஏற்றுக்கொள்ளப்பட முடியாதவை என்று கூறத்தகுந்த காரணங்கள் சொல்லப்பட்டிருக்குமாயின் குழப்பம் நீங்கியிருக்கும்.

" வள்ளுவர் ஆராய்ச்சி வளர வேண்டும். உண்மை நெறியைத் தமிழகம் உணர வேண்டும். அந்நெறி உலக நெறியாக மலர வேண்டும். தமிழனின் திருமறையாம் திருக்குறள் உலகமெங்கும் தன் புகழ் மணம் வீசி நிற்க வேண்டும், அதற்குப் பாரபட்ச மற்ற தூய்மையான ஆராய்ச்சி மலர வழி ஏற்பட வேண்டும். புலவர் தெய்வ நாயகத்தைப் போன்று பிற பலர் ஆய்வாளர்கள் முன்வர வேண்டும். அவர்கள் முயற்சி வெல்ல வேண்டும்."

## ஈடுபட வேண்டுகோள்

பேராசிரியர் இ. சு. முத்துச்சாமி, M. A., B. T.,
மாநிலக் கல்லூரி, சென்னை.

" இந்நூலாசிரியரின் ஆய்வுமுறை போற்றுதற்குரியது; அதனினும் அன்னாரது சமய வாதத்திறன் பெரிதும் மதிக்கத்தக்கது. தொடுக்கும் வினாக்களும் கொடுக்கும் பதில்களும் ஆணித்தரமாக அமைந்துள்ளன. ஒப்புமை ஆய்வும், உள்ளொற்றுமை ஆய்வும், இறுதியாக நம்மிடம் கேட்கும் கேள்விகளுக்கு அவர் கூற விரும்பும் பதிலை வர வழைக்கும் திறனும் வியக்கத் தக்கவை. அவரது ஆராய்ச்சி முழுவதிலும் ஒருவகை ஒருமைப்பாடு அமைந்து கிடக்கின்றது.

"திருக்குறள் முழுமைக்குமே ஒரு மணி விளக்கவுரையைப் பல்லாயிரம் பக்கங்களில் வரைந்தால்தான் அவர்தம் ஆராய்ச்சி முற்றுப்பெறும். அத்தகைய பெரும்பணியில் ஈடுபடுமாறு இந்நிலையில் இந்நூலாசிரியருக்கு வேண்டுகோள் விடுக்கின்றேன்."

# தடுத்திட வேண்டுகோள்

இத்திருக்குறள் ஆய்வு மாநாட்டு முடிவு பற்றிச் சென்னைப்பல்கலைக்கழக 1973 அக்டோபர் வெளியீட்டின் வாயிலாக விடுக்கப்பட்டுள்ள வேண்டுகோளின் முறை, பொருள் முதலியன நல்லறிஞர்களின் சிந்தனைக்கு உரியவை.

" திருவள்ளுவர் கிறித்தவர்; தோமையரிடம் ஞான முழுக்குப் பெற்றவர். திருக்குறள் விவிலியத்தின் மொழி 'பெயர்ப்பு' என்னும் நிலை ஏற்பட்டுவிட்டது. இதற்கு மூலகாரணர் திரு. கா. அப்பாதுரை அவர்களேயாவர். தமிழர்க்குத் தமிழ்ப் பண்பாட்டைக் காட்ட ஒரு நூல் தமிழில் இல்லாத நிலை ஏற்பட்டுவிடும் இப்போக்கைத் தடுக்கா விட்டால். எண்ணி ஆவன செய்க."

First All India Tir ukural Research Seminar Papers.
Page XX.

மேலே காணும் சென்னைப் பல்கலைக்கழக வெளியீட்டின் வேண்டுகோள் பற்றிய பல்வேறு அறிஞர்களின் ஆய்வுக் கருத்துகள், விரைவில் வெளிவர இருக்கும் மாத இதழின் முதல் வெளியீட்டில் வெளிவரும்.

---

குறிப்பு :

ஆர்வமுள்ள அன்பர்கள் இந்நூலாசிரியருடன் தொடர்பு கொள்ளலாம். ஆசிரியருடன் தொடர்புகொள்ள விரும்பும் அன்பர்கள், 'ஆசிரியர் தொடர்ந்து இவ்வாராய்ச்சியில் ஈடு படவேண்டுமா? அல்லது ஆசிரியர் முயற்சி தடுத்து நிறுத்தப்பட வேண்டுமா?' என்பதற்கான தங்கள் விருப் பத்தைத் தக்க காரணங்களுடன் வெளிப்படுத்தலாம். இரு வகையான கருத்துகளும் வரவேற்கப்படும். சிறந்தவை மாத இதழில் வெளியிடப்படும். —ஆசிரியர்

## திருக்குறள் ஆராய்ச்சியில் இதுவரை வெளிவந்துள்ள இவ்வாசிரியரின் நூல்கள்.



1 திருவள்ளுவர் கிறித்தவரா?

2 ஐந்தவித்தான் யார்?

3 வான் எது?

4 நீத்தார் யார்?

5 சான்றோர் யார்?

6 எழுபிறப்பு—?

7 மூவர் யார்?

8 அருட்செல்வம் யாது?




தமிழ் இலக்கியக் கழகம்

திருச்சி–620001.